## மத்வவிலாஸ புக்டிபோவில் பிரசுரிக்கப்பட்ட ஸம்ஸ்கிருத புஸ்தகங்கள்.

(தேவநாகர எழுத்து.)

| | | ரூ. அ. ப. |
|---|---|---|
| I. | மஹாபாரதம் (தென் தேசத்துப் பாடம்) அநேக தேசபாடாந்தரமும் டிப்பணியும் 18 பர்வங்கள் 6 வால்யூமாக பைண்டு செய்யப்பட்டது கிரயம். ... | 30—0—0 |
| II. | மஹாபாரத விஷய சூசிகை. ... | 8—0—0 |
| III. | வால்மீகி ராமாயணம் கோவிந்தராஜீய வியாக்கியானம் ஸம்பூர்ணம், இன்னும் 9 இதர வியாக்கியானங்களிலிருந்து ஸாராம்சமும் பாடபேதமும் உள்பட ஸப்த காண்டங்களும் 3 வால்யூமாக பைண்டு செய்யப்பட்டது கிரயம். .. | 28—0—0 |
| IV. | ஸ்ரீ பாகவதம் ஸ்ரீதரீயபாடம். த்வைத விசிஷ்டாத்வைத பாடபேதங்களுடன் மூலம் 12 ஸ்கந்தங்களும் 2 வால்யூமாக பைண்டு செய்யப்பட்டது கிரயம். ... | 7—8—0 |
| V. | த்வைத மாத்வ வேதாந்த புஸ்தகங்கள 30 வால்யூமாக பைண்டு செய்யப்பட்டவை கிரயம். ... | 162—8—0 |
| VI. | ஸம்ஸ்கிருதம முதல் ரீடர் கிரயம். ... | 0—3—6 |
| VII. | சப்தரூபாவளி (151) சப்தங்கள் அடங்கியது. ... | 0—2—0 |

## இங்கிலீஷ் புஸ்தகம்.

| | | |
|---|---|---|
| I. | ஸ்ரீ பாகவதம இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு 12 ஸஞ்சிகையில் முடிவுபெறும. ஸஞ்சிகை 1-க்கு கிரயம். ... | 1—8—0 |

# பீஷ்மசரித்ரம்.

இது

சென்னை விசிஷ்டாத்வைத காலேஜ் பிரின்ஸிபால்

ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் B.A.,

அவர்களால் எழுதப்பட்டு,



மதராஸ் திருவல்லிக்கேணி,

மத்வவிலாஸ புக்டிபோ ப்ரோப்ரைடர்

பண்டிட் டி. ஆ. கிருஷ்ணசாரியரால்

ப்ரசுரிக்கப்பட்டது.



PUBLISHED BY

**Pandit T. R. KRISHNACHARYA,**

PROPRIETOR, MADHVA VILAS BOOK DEPOT,

TRIPLICANE, MADRAS

# அட்டவணை.

---

# பீஷ்மசரித்ரம்.

---

வஸிஷ்டர் வஸுக்களைச் சபித்தது

லோகபாலர்களில் ஒருவரான வருணனுக்கு ஊர்வசியிடத்தில் பிறந்த வஸிஷ்டமஹர்ஷிக்கு ஆபவரென்றும் பெயருண்டு. (ஆப: ஜலங்கள்; அவற்றிற்கு அதிபதியாயிருப்பதால் வருணனுக்கு ஆபவனென்று பெயர்; அவனுடைய புத்ரரான வஸிஷ்டருக்கும் அந்தப் பெயர் வந்தது) அவர் மேருமலையின் சார்பில் ஓர் அழகான ஆச்ரமத்தில் தபஸ் செய்துகொண்டிருந்தார். அவர் செய்யும் யாக யக்ஞங்களுக்கும் ஹோமங்களுக்கும் வைதிக க்ரியைகளுக்கும் வேண்டிய பால் தயிர் வெண்ணெய் நெய் முதலியவைகளைக் குறைவில்லாமல் கொடுக்கக் கூடிய ஒரு அபூர்வமான பசுவை வெகு ப்ரீதியுடன் தன் ஆச்ரமத்தில் வளர்த்து வந்தார். தக்ஷனுடைய புத்ரிகளில் ஒருத்தியான ஸுரபியென்ற தைவப்பசுவே அந்தக் கன்றிற்குத் தாயாகும். மனஸால் நினைக்கும் யாவற்றையும் கொடுக்கக் கூடிய அந்தப் பசு தன்னிஷ்டப்படி பயமில்லாமல் ஸந்தோஷமாய் ஆச்ரமத்திலும் அதைச் சுற்றியிருந்த மரச்சோலைகளிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தது. தன் ஸகல க்ரியைகளும் அனுஷ்டானங்களும் அதையே பொறுத்திருந்தபடியால் வஸிஷ்டர் அதைத் தன் உயிரைக் காட்டிலும் ப்ரியமாய் ரக்ஷித்துவந்தார்; அப்படியே அவருடைய சிஷ்யர்களும் தங்களுடைய குருவிற்குப் பணிவிடை செய்வதுபோல் அதை இரவும் பகலும் பூஜித்துவந்தார்கள்.

ஒருநாள் வஸுக்களென்ற தேவகணங்கள் அந்த ஆச்ரமத்திற்கு வேடிக்கையாய் வந்து, தங்களுடைய பார்யைகளுடன் அங்குள்ள அழகான மணற்குன்றுகளிலும், தோப்புகளிலும், சோலைகளிலும், ஓடைகளிலும், ஏரிக்கரைகளிலும் விளையாடிக்கொண்டிருந்தார்கள் அவர்களில் ஒருவனான த்யு வென்னும் வஸுவின் பார்யை வராங்கியென்பவள் அங்கே ஸஞ்சரித்துக்கொண்டிருந்த நந்தினியென்ற அந்தக் காமதேனுவைக் கண்டாள். ஸகல உத்தம லக்ஷணங்களும் ச்லாக்யமான குணங்களும் பொருந்தின தாய்ப் பார்ப்பவர்களின் கண்களையும் மனதையும் அபஹரிக்கக் கூடியதாய் விளங்கும் அந்தத் தைவப்பசுவை அவள் தன் பர்த்தாவிற்குக் காட்டி. "நாத! இது யாருடையது? எந்த ஜாதியைச் சேர்ந்தது? இதன் மஹிமை என்ன" வென்று கேட்டாள். அதற்கு அவன் "ப்ரியே! இந்த ஆச்ரமத்தில் வஸிஷ்டபகவான் வஸிக்கிறார்; அவர் தபஸாலும் ஞானத்தாலும் சக்தியாலும் த்ரிமூர்த்திகளுக்கு ஸமமானவர்; அவருடைய வைதிக க்ரியைகளுக்காக இந்தப் பசுவை வைத்துக்கொண்டிருக்கிறார். இதற்கு நந்தினி யென்று பெயர். இது ஸுரபி யென்ற காமதேனுவின் புத்ரி; இதின் பாலைக் குடிப்பவர்கள் பதினாயிரவர்ஷங்கள் வரையில் யௌவனமழியாமல் பிழைத்திருப்பார்க" ளென்றான். அதைக் கேட்ட அந்த வஸுபத்னி "ஸ்வாமி! மனுஷ்யலோகத்தில் ஜிதவதியென்று ஒரு ராஜகன்யை எனக்கு உயிர்த்தோழியாயிருக்கிறாள். அவள் அழகாலும் உத்தம குணங்களாலும் நிகரற்றவள். அரசர்களுக்குள் சிகாமணியாய் விளங்கும் உசீனரனென்ற ராஜர்ஷி அவளுடைய பிதா. இந்தக் காமதேனுவின் பாலை அவள் குடித்து நரை திரை மூப்புத்துன்பமற்றவளாய் வெகுகாலம் ஜீவித்

திருக்கவேண்டுமென்று விரும்புகிறேன். ஆகையால் இதை இப்பொழுதே என்னிடத்தில் கொண்டுவந்து கொடுக்க வேண்டும். இதைக் காட்டிலும் எனக்கு ப்ரியமான கார்யம் வேறில்லை. இந்த எண்ணம் நிறைவேறா விட்டால் என் உயிர் தரிக்காது" தென்றாள். த்யுவென்பவன் அவளிடத்தில் வைத்த அளவற்ற ப்ரீதியால் அவளுடைய வார்த்தையைத் தள்ள முடியாமல் எப்படியாவது அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய நிச்சயித்து, ப்ருது முதலிய தன் ஏழு ஸஹோதரர்களைத் தனக்கு ஸஹாயஞ் செய்யும்படி கூட்டிக்கொண்டு நந்தினியைப் பலவந்தமாய்க் கொண்டுபோய்விட்டான். வஸிஷ்ட மஹர்ஷியின் தபோமஹிமையையும் சாபத்தின் கொடுமையையும் தான் செய்யும் அக்ரமத்தையும் மறந்தான். அளவிற்கு மிஞ்சி ஒருவரிடத்தில் ஆசைவைத்துத் தான் அவர்களுக்குக் கட்டுப்பட்டால் நேரும் கெடுதிகளுக்கு எல்லையுண்டோ? சிறிது நேரம்கழித்து வஸிஷ்டமஹர்ஷி பழங்களையும் கிழங்குகளையும் எடுத்துக்கொண்டு அந்த ஆச்ரமத்திற்கு வந்தார். அங்கே நந்தினியையாவது அதின் கன்றையாவது காணவில்லை. உடனே பரபரப்புடன் தன் சிஷ்யர்களுடன் அந்த வனத்தில் ஒவ்வோரிடத்திலும் வெகு ஜாக்கிரதையாய்த் தேடியும் அதைக் காணவில்லை. பிறகு தன் தபோமஹிமையாலும் திவ்யதிருஷ்டியாலும் நடந்த ஸங்கதிகளைத் தெரிந்துகொண்டு, அந்த அக்ரமத்தைச் செய்ய வஸுக்களைச் சபித்தார். "உங்களுக்கு நான் யாதொரு அபராதமும் செய்யவில்லை; ஸகல லோகங்களுக்கும் பரம மங்களமுண்டாகவேண்டுமென்றே நான் தபஸ் செய்துகொண்டிருக்கிறேன்; அப்படியிருக்க என் தபஸிற்கும் வைதிக க்ரியைகளுக்கும் அவச்யமான நந்தினியை என் அனுமதியில்லா

மல் அதற்கிஷ்டமில்லாமல் பலவந்தமாய் *அபஹரித்தீர்கள் மேலும், ஒரு ஸ்த்ரீயின் ஆசையைப் பூர்த்திசெய்வதையே மேலாகவெண்ணி கார்யாகார்யத்தையும் பாபபுண்யத்தையும் ஆலோசிக்காமல் இந்த மஹா பாதகத்தைச் செய்த நீங்களெல்லோரும் மநுஷ்யலோகத்தில் ஜன்மமெடுப்பீர்க" ளென்றார். வஸுக்கள் அந்தக் கோரமான சாபம் தங்களுக்குக் கிடைத்ததை அறிந்து, தாங்கள் செய்த குற்றத்தை நினைத்து நினைத்து மனம் நொந்து, அந்த மஹர்ஷியின் ஆச்ரமத்திற்குப் போய், தங்களுடைய குற்றத்தை ஒப்புக்கொண்டு, பச்சாத்தாபத்தைத் தெரிவித்து, அந்தக் கோரமான சாபத்திற்கு ஓர் பரிஹாரஞ்செய்யும்படி வஸிஷ்டரை ப்ரார்த்தித்தார்கள். ஆனால் தர்மாத்மாவான வஸிஷ்டர் அவர்களைப்பார்த்து "என் சாபம் வீணாகாது. ஆனால் உங்களில் ஏழு பெயர்கள் ஒவ்வொரு வர்ஷம் மநுஷ்யலோகத்தில் வஸித்து பிறகு என் சாபத்திலிருந்து விடுபடுவீர்கள். எவனுடைய பார்யையின் எண்ணத்தை நிறைவேற்றி நீங்கள் இந்த அகார்யத்தில் ஸஹாயஞ்செய்தீர்களோ அந்த த்யோவென்னும் எட்டாவது வஸுமாத்ரம் மநுஷ்யலோகத்தில் வெகுகாலம் ஜீவித்திருப்பான். அவன் தர்மாத்மாவாயும் ஸகல வைதிகலௌகிக சாஸ்த்ரங்களிலும் அஸ்த்ர வித்யையிலும் பகவத்பக்தியிலும் ப்ரஹ்ம ஞானத்திலும் நிகரில்லாதவனாய் ஸ்த்ரீபோகங்களை விலக்கி நித்ய ப்ரஹ்மசாரியாய் ஸகல லோகங்களிலும் காலமுள்ளவரையில் கீர்த்தி பெறுவான். தன் பிதாவின் விருப்பத்தையும் க்ஷேமத்தையும் கோறி அதற்காகத் தன் ஸௌக்யத்தைத் துறப்பா" னென்று அவர்களை அனுக்ரஹித்துத் தன் ஆச்ரமத்திற்குள் சென்றார்.

---

## கங்கைக்கு நேர்ந்த சாபம்.

இக்ஷ்வாகுவம்சத்தில் மஹாபிஷக்கென்ற ஓரரசனிருந்தான். ஸத்யஸந்தவருதவனும் மிகுந்த பராக்ரம முள்ளவனுமான அந்தப் பூபாலன் ஆயிரம் அஸ்வமேதயாகங்களாலும் நூறு ராஜஸூயங்களாலும் தேவேந்த்ரனைத் திருப்தி செய்தான். தன் ஆயுள் முடிந்தபிறகு ஸ்வர்க்கத்திற்குப் போய்த் தன் யக்ஞபலத்தை அநுபவித்துக் கொண்டிருந்தான். ஒரு காலத்தில் தேவர்களுடன் அவன் ப்ரஹ்மலோகத்திற்குப் போய் ப்ரஹ்மஸபையில் இருக்கையில் மஹாவிஷ்ணுவின் பாதகமலங்களிலிருந்து உண்டான கங்கையென்ற புண்யநதி ப்ரஹ்மாவைப் பூஜிப்பதற்காக அங்கே வந்தாள். அப்பொழுது சந்த்ரனைப்போன்ற காந்தியுள்ள அவளுடைய வஸ்த்ரம் காற்றால் விலகிற்று. உடனே அந்த ஸபையிலுள்ளவர்கள் யாவரும் தலைகுனிந்தார்கள். மஹாபிஷக் என்ற ராஜர்ஷி மாத்ரம் வெட்கமில்லாமல் ஆசையுடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அதைக் கண்டு ப்ரஹ்ம தேவர் அவனைப் "பாக்யமற்றவனே! நீ மறுபடியும் மனுஷ்ய லோகத்தில் பிறந்து மனஸின் கல்மஷத்தைப் போக்கிப் பிறகு உத்தமலோகங்களை அடைவாய். அறிவு கெட்டவனே! நீ எவள்மேல் ஆசைவைத்து வெட்கமில்லாமல் பார்த்தாயோ அந்தக் கங்கையே மனுஷ்யலோகத்தில் உனக்குப் பார்யையாய் உனக்கிஷ்டமில்லாத கார்யங்களைச் செய்துகொண்டிருப்பாள். அதனால் உனக்கு எப்பொழுது கோபமுண்டாகுமோ அப்பொழுதே நீ இந்தச் சாபத்திலிருந்து விடுபடுவா" யென்றார். அதைக் கேட்டு மஹாபிஷக் மிகுந்த வருத்தமடைந்து மனுஷ்யலோகத்தில் தான் யாருக்குப் புத்ரனாகப் பிறக்கலாமென்று நன்றாய் ஆலோசித்து முடி

வில் சந்த்ரவம்சத்தரசனான ப்ரதீபனே அதற்குத் தகுந்தவ னென்று நிச்சயித்தான்.

கங்கை ப்ரஹ்மஸபையிலிருந்து திரும்பிப் போகும் பொழுது தனக்கு அவ்விடத்தில் நேர்ந்த அவமானத்தை யும் மஹாபிஷக்கென்ற ராஜர்ஷி தன் மனதை அடக்கமுடி யாமல் போனதையும் நினைத்துக்கொண்டு அவனிடத்தி லேயே ஞாபகமுள்ளவளாயிருந்தாள். போகும் வழியில் அஷ்டவஸுக்களைக் கண்டு அவர்கள் காந்தி குறைந்து தேஜஸ் மழுங்கியிருப்பதை அறிந்து "வஸுக்களே! உங்க ளுக்கு இந்தக் கதி நேரக் காரணமென்ன" வென்று கேட் டாள். அவர்கள் "புண்யநதியே! நாங்கள் மஹாத்மாவான வஸிஷ்டமஹர்ஷிக்கு மஹா அபராதத்தைச் செய்தோம். எங்களில் ஒருவனான த்யோவின் பார்யையைத் திருப்தி செய்ய விரும்பி அந்த மஹர்ஷியின் ஹோமப்பசுவை அப ஹரித்தோம். அதற்காக அவர் எங்களை மனுஷ்யலோகத் தில் ஜன்மமெடுக்கும்படி சபித்திருக்கிறார். நீ எங்களுக்கு ஓர் பெரிய உபகாரத்தைச் செய்யவேண்டும். நாங்கள் மனுஷ் ய ஸ்த்ரீகளின் கர்ப்பத்திலிருந்து பிறக்கமாட்டோம். ஆகை யால் நீ பூமியில் மனுஷ்ய ஸ்த்ரீயாய்ப் பிறந்து எங்களைப்புத்ரர் களாய்ப் பெறவேண்டு" மென்று ப்ரார்த்தித்தார்கள். அதற் குக் கங்கை "அப்படியே செய்கிறேன். பூலோகத்தில் எந்தப் புண்யாத்மா உங்களை என்னிடத்தில் புத்ரர்களாகப் பெறக் கூடியவ" னென்றாள். அதற்கு வஸுக்கள் "சந்த்ர வம்சத்தரசனான சந்தனு எங்களுக்குத் தகுந்த பிதா வென்று நாங்கள் நிச்சயித்திருக்கிறோம். உன் இஷ்டம் எப்படி" யென்றார்கள். கங்கை ப்ரஹ்மஸபையில் நடந்த தையும் மஹாபிஷக் மனுஷ்யலோகத்தில் ப்ரதீபனுடைய புத்ரனாக சந்தனுவென்று பிறக்க நிச்சயித்ததையும் நினை

த்து, 'இது கர்மகதியே' யென்று அதன் விசித்ரத்தை ஆலோசித்து "வஸுக்களே! உங்களுக்கு என்றால் கூடிய வரையில் உபகாரஞ்செய்கிறேன். உங்களுக்கு இந்தச் சாபதண்டனை சீக்ரத்தில் நிவர்த்தியாகும்படி நான் என்ன செய்யவேண்டு" மென்றாள். அதைக் கேட்டு வஸுக்கள் தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டு "நாங்கள் ஒவ்வொரு வராய்ப் பிறந்தவுடன் எங்களைக் கங்கையில் போட்டுவிடு" வென்றார்கள். கங்கை "அப்படியே ஆகட்டும். ஆனால் அந்த அரசன் என்னைப் பார்யையாய் அடைவது வீணாகக் கூடாது. அவனுக்கு ஒரு புத்ரனை வம்ச விருத்திக்காக நிறுத்திவைக்கவேண்டு" மென்றாள். வஸுக்கள் "ஆனால் நாங்கள் ஒவ்வொருவரும் எங்களுடைய சக்தியில் ஒரு பாகத்தைக் கொடுப்போம். அதனால் ஒரு புத்ரன் பிறப் பான். மனுஷ்யலோகத்தில் அவனுக்கு ஸந்ததியிராதெ" ன்று கங்கையுடன் இப்படி ஏற்பாடு செய்துகொண்டு தங் களுடைய சாபம் ஒருவகையாய் விமோசனமாவதைக் குறித்து ஸந்தோஷமடைந்து தங்களுடைய லோகத்திற் குப் போய்ச் சேர்ந்தார்கள்.

சந்த்ரவம்சத்தில் ப்ரதீபனென்ற அரசன் ஸகல ப்ராணிகளுக்கும் நன்மையைச் செய்வதிலேயே நோக்க முள்ளவனாய், தன் ப்ரஜைகளைத் தர்மமாய்ப் பரிபாலித்து வந்தான். அவன் ஒரு காலத்தில் கங்கை உத்பத்தியாகும் புண்யஸ்தலத்தில் அநேக வர்ஷங்கள்வரையில் ஜபஞ்செய்து கொண்டிருந்தான். ஒருநாள் வேதாத்யயனஞ்செய்துகொண் டிருக்கும்பொழுது கங்காதேவி ஜலத்திலிருந்து வெளியில் வந்து மனோஹரமான பெண்ரூபத்தைத் தரித்து அந்த ராஜர்ஷியின் வலது துடையில் உட்கார்ந்தாள். அதைக் கண்டு ப்ரதீபன் "பெண்ணே! நான் உனக்கு என்ன

செய்யவேண்டும்? எந்த இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய வேண்டு" மென்றாள். கங்கை "ராஜர்ஷே! நான் உன்னிடத்தில் ஆசைகொண்டிருக்கிறேன். நீயும் அப்படியே என்னிடத்தில் ஆசைவைத்து என்னை ஸந்தோஷப்படுத்த வேண்டும். தன்னிடத்தில் ப்ரியம் வைத்த ஸ்த்ரீகளைத் தள்ளிவிடக்கூடாதென்று ஸாதுக்கள் சொல்லுகிறார்க" ளென்றாள். ப்ரதீபன் "தேவி! நான் பரஸ்த்ரீகளை மனஸாலும் நினைக்கிறதில்லை; மேலும் வேறு வர்ணத்தில் பிறந்த பெண்ணைத் தன் தாயைப்போல் எண்ணவேண்டும். இந்தத் தர்மத்தை நான் பிறந்ததுமுதல் அனுஷ்டித்துக் கொண்டுவருகிறேன். கோரமான நரகங்களில் காலமுள்ள வரையில் சுற்றிக்கொண்டிருக்க வேண்டுமானால் நீ சொல்வதைக்காட்டிலும் வேறுவழி வேண்டுவதில்லை" யென்றான். கங்கை "பூபதே! நான் பிறப்பிலாவது ரூபத்திலாவது ஆசாரத்திலாவது மற்ற நல்ல குணங்களிலாவது மற்ற ஸ்த்ரீகளைக்காட்டிலும் குறைந்தவளில்லை. நானே வலுவில் உன்னைத் தேடி விரும்பும்பொழுது நீ என்னை ஆதரிப்பது தர்மத்திற்கு விரோதமென்று சொல்ல முடியுமா" வென்றாள். அப்பொழுது ப்ரதீபன் "இந்தத் தர்ம ஸங்கடத்திலிருந்து நான் எப்படித் தப்பித்துக்கொள்வேன். இவளிடத்திலோ எனக்குக் கொஞ்சமேனும் ஆசையில்லை. என்னை வலுவில் வந்து ப்ரார்த்தித்த ஸ்த்ரீயை மறுப்பது அதர்மமென்று எனக்கு நன்றாய்த்தெரியும். இப்பொழுது என்ன செய்யலா" மென்று ஆலோசித்துப் "பெண்ணே! உன் வார்த்தைகள் என்னிடத்தில் விசேஷ ப்ரீதியைக் காட்டினாலும் உன் நடத்தை அதற்கு முற்றிலும் விரோதமாயிருக்கிறதே. ஸ்த்ரீகளின் தர்மத்தைப் பூர்ணமாயறிந்த நீ என் வலதுதுடையில் உட்கார்ந்தாய்.

அது என் பெண்களும் மருமகளும் உட்காரவேண்டிய இடம். என்னிடத்தில் ப்ரேமைவைத்து என்னைப் பத்தாவாயடைய விரும்பும் ஸ்த்ரீகள் உட்காரவேண்டிய ஸ்தானம் இடதுதுடையென்று உனக்குத் தெரியாததல்லவே. உன் செய்கையாலேயே நீ என்னை, மருமகளென்று நிரூபித்தாய். நான் அந்தக் காரணத்தாலேயே உன்னிடத்தில் என் மனதைச் செலுத்தவில்லை. நீ என் புத்ரனுக்குப் பார்யையாகக் கடவாய்” என்றான். அதற்குக் கங்கை “தர்மாத்மாவே! அதுவும் எனக்கு இஷ்டமே நான் உன் புத்ரனுக்குப் பார்யையாகிறேன். உன்னிடத்தில் வைத்த ப்ரியத்தால் நீ பிறந்த பரதவம்சத்தை நான் ஸர்வவிதத்திலும் விருத்திசெய்கிறேன். இந்தப் பூமியிலுள்ள அரசர்களெல்லோர்க்கும் நீங்களே ஆதாரமாகப் போகிறீர்கள். நான் உன்னுடன் இப்பொது செய்யும் ஏற்பாட்டின்படி நடக்கிறேன். ஆனால் நான் எந்தக் கார்யங்களைச் செய்தாலும் அவன் என்னிடத்தில் கோபித்துக்கொள்ளக்கூடாது. அவைகளை விசாரிக்கக்கூடாது. என் இஷ்டத்தை மீறி எந்த க்ஷணத்தில் நடக்கிறானோ அந்த க்ஷணத்திலேயே நான் அவனை விட்டுப் போய்விடுவேன்” என்று மறைந்தாள்.

ப்ரதீபன் அவளுடைய வார்த்தையை நினைத்துக் கொண்டே தனக்குப் புத்ரன் பிறப்பதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். சிலகாலத்திற்குப் பின்பு மஹாபிஷக் என்ற ராஜர்ஷி ப்ரதீபனுக்கும் அவனுடைய பார்யைக்கும் புத்ரனாகப் பிறந்தான். ப்ரதீபன் தனக்கு வெகு வயஸான பிறகு ஸந்தானம் உண்டானதால் அவனுக்கு சந்தனுவென்று பெயரிட்டான் (தன் இந்த்ரியங்களும் மனஸும் சாந்தமான வயஸில் உண்டாக்கப்பட்டவனென்று

கருத்து.) அவன் காலக்ரமத்தில் வேதசாஸ்த்ரங்களிலும் அஸ்த்ரசஸ்த்ர வித்யைகளிலும் நிபுணனாய்த் தர்மத்தில் நோக்கமுள்ளவனாய் அழகாலும் நல்ல குணங்களாலும் லோகத்தை ப்ரகாசிக்கச்செய்து கொண்டிருந்தான். அவனுக்கு யௌவனம் வந்தபொழுது ப்ரதீபன் ஒரு நாள் அவனை அழைத்துக் "குழந்தாய்! முன்பு ஒரு காலத்தில் ஒரு தேவலோகத்துப் பெண் என்னிடத்தில் வந்தாள். அவளை நான் உனக்குப் பார்யையாகக் கோறியிருக்கிறேன். அவள் புத்ரர்களைப் பெற விரும்பி உன்னிடத்தில் வந்தால் நீ அவளை யாரென்று கேட்காதே. அவள் எந்தக் கார்யத்தைச் செய்தாலும் அதைவிசாரிக்காதே. அவளை இந்த நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு நீ பார்யையாக அடையவேண்டுமென்பது என் கட்டளை, என் இஷ்டம்" மென்றான். பிறகு தன் ராஜ்யத்தை அவனுக்குக்கொடுத்து விட்டுத் தான் தபோவனத்திற்குச் சென்றான்.

சந்தனு ராஜ்யாதிபத்யத்தை ஒப்புக்கொண்டு திக்விஜயஞ்செய்து பூமிக்கு நாதனாக (அனேக யாகயக்ஞங்களை விதிப்படி நடத்தி, மனுஷ்யர்களுக்கும் தேவதைகளுக்கும் திருப்திசெய்தான். இப்படி) மன்னவர்களுக்கு மன்னனாய் விஷ்ணுவைப்போல ப்ரஜைகளைப் பரிபாலனஞ்செய்கிறவனாய் விளங்கும் அந்தச் சந்தனு சக்ரவர்த்தி ஒருநாள் கங்கைக்கரையில் வேட்டையாடிக் கொண்டிருக்கும்பொழுது, ஒரிடத்தில் அழகாலும் தேஜஸாலும் லக்ஷணங்களாலும் லக்ஷ்மியையும் ஸரஸ்வதியையும் பார்வதியையும் போன்ற ஓர் தேவஸ்திரீ ஸ்நானஞ்செய்து தன் தலைமயிரை ஆற்றிக்கொண்டு தனியாக நிற்பதைக்கண்டான். அவள் சந்தனுவைக் கண்டவுடன் அவனை நோக்கிவந்து ஒரு க்ஷணத்தில் அவனுடைய இந்த்ரியங்களையும் மனஸையும்

கொள்ளைகொண்டாள். சந்தனு ஒன்றும் தோன்றாமல் சற்றுநேரம் திகைத்து நின்று பிறகு ஆசைமீறிப் "பெண்ணே! நீ இந்த ப்ரஹ்மாண்டத்தில் ப்ரஹ்மாவால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஜீவகோடிகளில் சேர்ந்தவளல்லவென்று நம்புகிறேன். மனுஷ்யர்கள் நாகர்கள் யக்ஷர்கள் அப்ஸரஸ்கள் கந்தர்வர்கள் அஸுரர்கள் தேவர்கள் முதலிய வகுப்புகளில் இவ்விதமான ஸ்த்ரீயை ஒருவரும் பார்த்திருக்க மாட்டார்கள். என் மனதையும் உயிரையும் கவர்ந்த நீ யாராயிருந்தாலும் எனக்குப் பார்யையாகக் கடவாய். என்னையும் என்னைச்சேர்ந்த யாவற்றையும் உன் இஷ்டப்படி உபயோகித்துக்கொள்" வென்றான். அவனுடைய க்ஷேமத்திற்காகவும் வஸுக்களின் சாபத்தை நீக்குவதற்காகவும் வந்த கங்கைதான் ப்ரஹ்மஸதஸிலேயே மஹாபிஷக்கைக் கண்டு அவனிடத்தில் ஆசைகொண்டவளாதலால் தன் எண்ணங்களை முடித்துக்கொள்ள அதே ஸமயமென்று அவனுடைய ஸமீபத்தில் வந்து புன்சிரிப்புடன் "மஹாராஜ! நான் உனக்குப் பார்யையாக வேண்டுமென்றிருந்தால் நீயாவது மற்ற யாராவது என்னை யாரென்று தெரிந்துகொள்ள எவ்வகையிலும் யத்னஞ்செய்யக்கூடாது. நல்லதோ கெட்டதோ நான் எதைச்செய்வேனோ அதைத்தடுக்கக்கூடாது. எனக்கிஷ்டமில்லாத வார்த்தைகளைச் சொல்லவுங் கூடாது. இப்படிச் செய்யத் தவறின அந்த க்ஷணத்திலேயே உன்னை விட்டுப்போய்விடுவேன். முன்பே உன் பிதா இந்த நிபந்தனையின்மேல் என்னை அங்கீகரித்திருக்கிறா"ரென்றாள். சந்தனு 'அப்படியே ஆகட்டுமென்று' அவளைத் தன் பார்யையாக அங்கீகரித்து ஹஸ்தினபுரத்திற்கு அழைத்துவந்தான். கங்கை தன் அழகாலும் குணங்களாலும் அவனை ஸகலவிதத்திலும் திருப்திசெய்துகொண்டிருந்

தாள். இப்படி அநேக வர்ஷங்களானபின் கங்கை கர்ப்பந்தரித்து எட்டுப் புத்ரர்களை க்ரமமாய்ப்பெற்றாள் ஒவ்வொரு குழந்தையையும் பிறந்தவுடனே "குழந்தாய்! உன் ப்ரீதியின் பொருட்டு இந்தக்காரியம் செய்கிறேன்" என்று அவள் அக்குழந்தையின் கழுத்தைப் பிடித்துக்கொண்டு கங்காப்ரவாஹத்தில் போட்டுக்கொண்டுவந்தாள். அந்தக் கோரமான க்ருத்யத்தைக் கண்டும் சந்தனு தன் ப்ரதிக்ஞையை ஞாபகப்படுத்திக்கொண்டு அவளை விட்டுப் பிரிய மனதில்லாதவனாய் யாதொன்றும் சொல்லவில்லை. அவளைத் தடுக்கவுமில்லை. ஆனால் எட்டாவது புத்ரன் பிறந்தவுடன் கங்கை ஸந்தோஷத்தால் சிரித்துக்கொண்டு அந்தக் குழந்தையையும் கொல்ல விரும்பும்பொழுது சந்தனுவின் மனோதைர்யம் அழிந்து துக்கம் தாங்காமல் தன் ப்ரதிக்ஞையையும் மறந்து தன் புத்ரனைக் காப்பாற்றவேண்டுமென்ற எண்ணம் மேற்கொண்டு "நீ யார்? யாரைச் சேர்ந்தவள்? உனக்குப் பிறந்த புத்ரர்களை ஏன் இப்படித் தயையில்லாமல் கொல்லுகிறாய்? இதனால் உனக்குப் பெரும் பாபம் நேராதா" வென்றான். உடனே கங்கை "மஹாராஜ! நான் மூன்று லோகங்களிலும் ஸஞ்சரிக்கும் கங்கை. தேவகார்யமாய் உன்னிடத்தில் சிலகாலம் இருக்கவேண்டியிருந்தது. நீ செய்த ப்ரதிக்ஞையைத் தவறினதால் இனி இங்கே நான் வஸிக்கமுடியாது. நமக்குப் பிறந்த எட்டுப் புத்ரர்களும் மஹாமஹிமையுள்ள வஸுக்கள். வஸிஷ்டருடைய சாபத்தால் மனுஷ்யலோகத்தில் பிறந்தார்கள். அவர்களுக்கு உன்னைப்போன்ற பிதாவும் என்னைப்போன்ற மாதாவும் மனுஷ்யலோகத்தில் கிடைக்காது. அவர்கள் என்னைக் கேட்டுக்கொண்டதால் அவர்களைப் புத்ரர்களாகப் பெற்றேன். இதனால் நீயும் அழியாத உத்தமலோகங்களை

அடைந்தாய். இந்த வஸுக்கள் தாங்கள் மனுஷ்யலோகத்தில் பிறந்து அதிசீக்ரத்தில் சாபத்திலிருந்து விடுபட வேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொண்டதால் நான் அவர்களைப் பிறந்தவுடன் கொன்றேன். வஸுக்களின் வரத்தினால் பாலஹத்யை எனக்கில்லை. (இந்த எட்டாவது புத்ரனை நான் கொல்லவில்லை. அவன் வஸுக்களின் சக்திகள் சேர்ந்து உண்டாயிருக்கிறான்). மனுஷ்யர்களுக்குக் கிடைக்காத ஆயுளையும் சக்தியையும் பராக்ரமத்தையும் இவன் அடைவான். இவனை நீ ஜாக்ரதையாகக் காப்பாற்ற வேண்டு" மென்று வஸுக்களுக்கு வஸிஷ்ட மஹர்ஷியால் நேர்ந்த சாபத்தையும் விஸ்தாரமாய்ச் சொல்லிக் குழந்தையை எடுத்துக்கொண்டு மறைந்தாள்.

பிறகு முப்பத்தாறு வர்ஷங்கள் வரையில் சந்தனு ஸ்த்ரீஸுகத்தை அனுபவிக்காதவனாய், காட்டிலேயே திரிந்துகொண்டிருந்தான். ஒரு நாள் கங்கைக் கரையில் வேட்டை யாடிக்கொண்டிருக்கும்பொழுது கங்கையின் ஜலம் வற்றியிருப்பதைக் கண்டு அதன் காரணத்தை அறிய விரும்பித் தேடிக்கொண்டு போகும்பொழுது, ஸகல ராஜலக்ஷணங்களாலும் தேவலக்ஷணங்களாலும் விளங்கும் ஓர் சிறுவன் தன் பாணங்களால் கங்கையின் ப்ரவாஹத்தைத் தடுத்துக்கொண்டு நிற்பதைக் கண்டான். மனுஷ்யர்களால் செய்ய நினைக்கவும் முடியாத அந்தக் கார்யத்தை விளையாட்டாய்ச் செய்துகொண்டிருக்கும் அந்தச் சிறுவனைத் தன் புத்ரனென்று அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் அந்த ராஜகுமாரன் தன் மாயையை ப்ரயோகித்து சந்தனுவை மயங்கச் செய்து அங்கிருந்து மறைந்தான். உடனே சந்தனு அந்த ஆச்சர்யத்தைக் கண்டு அவன் தன் புத்ரனாயிருக்கலாமென்று ஸந்தேஹி

த்துக் கங்கையைத் தனக்கு ப்ரத்யக்ஷமாகும்படி கேட்டுக் கொண்டான். உடனே கங்கை அந்தக் குமாரனைக் கை யில் பிடித்துக்கொண்டு அவனுக்கெதிரே தோன்றினாள். அப்பொழுதும் அவனை அவன் தெரிந்துகொள்ளவில்லை. கங்கை அவனைப் பார்த்து "மஹாராஜ! முன்பு நமக்குப் பிறந்த எட்டாவது புத்ரன் இவனே. இவனுடைய தமயன் கள் ஏழுபேரும் என்னுடைய ஜலத்தில் தேஹத்தை விட்டு வஸுக்களின் ஸ்வரூபத்தை அடைந்தார்கள். ஆகையால் அவர்களைப் பற்றி வ்யஸனப்படாதே. இவன் வஸிஷ்ட மஹர்ஷியிடத்தில் ஸகல வேதவேதாங்கங்களையும் கற் றிருக்கிறான். ஸகல லோகங்களிலுள்ள அஸ்த்ர சாஸ்த்ரங் களும் இவனுக்கு ஊழியஞ் செய்கின்றன. சுக்ராசார்யருக் கும் பிருஹஸ்பதி பகவானுக்கும் எந்த சாஸ்திரங்கள் தெரியுமோ அவையாவும் இவனிடத்தில் நிலை பெற் றிருக்கின்றன. விஷ்ணுவின் அம்சாவதாரமான பரசு ராமருக்குத் தெரிந்த அஸ்த்ரங்கள் யாவும் இவனுக்குத் தெரி யும். ஸகல லோகங்களாலும் கொண்டாடப்பெற்ற இந்த உன் குமாரனைப் பெற்றுக்கொள்" ளென்று அவனிடத்தில் ஒப்புவித்து அங்கேயே மறைந்தாள். சந்தனு பரமானந்த மடைந்து தன் புத்ரனுடன் ராஜதானிக்கு வந்து சீக்ரத்தில் அவனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்வித்தான். இப்படி நாலு வர்ஷங்கள் சென்றபிறகு சந்தனு யமுனாநதிக் கரையில் போய்க்கொண்டிருக்கும்பொழுது ஓர் அற்புத மான வாஸனையை உணர்ந்து அது வந்த வழியாகவே தே டிக்கொண்டு போகையில் தேவஸ்த்ரீயைப்போல் அழ குள்ள ஒரு செம்படவப் பெண்ணைக் கண்டு அந்த வாஸனை அவளிடத்திலிருந்து உண்டானதை அறிந்தான். பிறகு சந்தனு "பெண்ணே ! நீ யார் ? யாருடைய பெண் ? இங்கே

என்ன செய்து கொண்டிருக்கிறு" யென்று கேட்டான். அவள் "மஹாராஜ! செம்படவர்களுக்கு அரசனும் மஹாத்மாவுமான உச்சைச்ரவா யென்கிற என் பிதா என்னை இங்கிருந்துகொண்டு இந்த ஆற்றைக் கடப்பவர்களுக்குப் புண்யத்திற்காக ஓடம் விடும்படி கட்டளையிட்டிருக்கிறு" ரென்றுள். சந்தனு அவளுடைய அழகாலும் மதுரமான வார்த்தைகளாலும் அவளிடத்தில் ஆசைகொண்டு அவளுடைய தகப்பனிடஞ்சென்று அவளைத் தனக்குப் பார்யையாகக் கொடுக்கும்படி கேட்டான். அதற்கு அந்தச் செம்படவன் "மஹாராஜ! ஒருவன் பெண்ணைப்பெற்றவுடன் அவளை யாருக்காவது பார்யையாகக்கொடுக்கவேண்டியதல்லவா? தங்களைப்போன்ற உத்தமமான வரன் எனக்குக் கிடைக்குமா? ஆனுலும் இவளைத் தாங்கள் தர்மபத்னியாக அடைய விரும்பினுல், ஒரு நிபந்தனையைச் செய்ய நிச்சயித்தால், இவளை விவாஹஞ் செய்து கொடுப்பே" னென்றுன். அதைக் கேட்டுச் சந்தனு "நீ விரும்புவதைச் சொல். அது கொடுக்கக் கூடியதானுல் கொடுக்கிறேன்; தகாததானுல் கொடுக்கமாட்டேன். ஆகையால் இது இன்னதென்று தெரிந்தபிறகே ப்ரதிக்ஞை செய்யமுடியுமென்றுன். அப்பொழுது உச்சைச்ரவா "இவளிடத்தில் பிறக்கும் புத்ரனுக்கே நீ பட்டாபிஷேகஞ் செய்ய வேண்டும். மற்ற யார்க்கும்உன் ராஜ்யத்தில் பாத்யம் ஏற்படக்கூடாதெ"ன்றுன். சந்தனுவுக்கு உச்சைச்ரவஸனுடைய பெண்ணுன ஸத்தியவதியிடத்தில் எல்லையற்ற ஆசையிருந்தாலும் அவன் கேட்ட வரத்தைக்கொடுக்கஇஷ்டப்படவில்லை. தான் ஒரு பெண்ணை விவாஹம் செய்துகொள்வதற்காகத் தன் மூத்த புத்ரனுக்கு ராஜ்யம் இல்லையென்று எப்படிச் சொல்லமுடியும்? அது ராஜ்தர்மத்திற்கு விரோதமல்லவா? அவ்விதமான பாபத்

றைதர் செய்தாவது தான் ஸுகமடைய நினைப்பது மிகவும்
இழிவான கார்யமென்று யாதொரு பதிலும் சொல்லாமல்
தன் நகரத்திற்குத் திரும்பிவந்தான். ஆனாலும் ஸத்யவதி
யையே நினைத்துக்கொண்டு ராஜ்யகார்யங்களைக் கவனிக்கா
மல் ஏக்கம்பிடித்திருந்தான். அவனுடைய புத்ரனான
தேவவ்ரதன் அதைக் கவனித்து ஒரு ஸமயத்தில் அவர்
தனியாயிருக்கும்பொழுது அவரை நமஸ்கரித்து "ஸ்வாமி!
நமது ராஜ்யத்தில் கலகம் பஞ்சம் வ்யாதி திருட்டு வெள்
ளம் அகாலமரணம் முதலிய குறைகளில்லையே. ஸக
லராஜாக்களும் தங்களுக்கு அடங்கி யிருக்கின்றார்களே.
தங்களுடைய தேகத்தில் யாதொரு அஸௌக்யமுமிருப்
பதாய் நமது வைத்யச்ரேஷ்டர்கள் சொல்ல வில்லையே.
நமது பந்துக்களுக்கும் மித்ரர்களுக்கும் யாதொரு
அஸௌக்யமாவது அபாயமாவது கெடுதியாவது நேர்ந்
ததாகத் தெரியவில்லையே. இப்படியிருக்கத் தாங்கள்
முகம் வாடித் தேகம் மெலிந்து பெருமூச்சு விட்டுக்
கொண்டு ஒன்றையும் கவனிக்காமல் ஒன்றிலும் திருப்தி
யடையாமல் தனியே உட்கார்ந்து கண்ணீர் விட்டுக்கொண்
டிருக்கிறீர்களே. நான் தெரியாத்தன்மையால் தங்களுக்கு
ஏதாவது அபராதம் செய்திருக்கிறேனா? அப்படியிருந்தால்
உடனே அதற்காக என்னைச் சிக்ஷித்து நல்லபுத்தி சொல்ல
வேண்டும். அல்லது, தங்களுடைய மனஸில் வேறுவித
மாக கவலையிருந்தால் அதைப் பரிஹாரஞ் செய்கிறேன்.
தாங்கள் விரும்பும் வஸ்து எதாயிருந்தாலும் அதைத் தங்
களுக்குக் கிடைக்கச்செய்கிறே"னென்றான். அதைக் கேட்
டுச் சந்தனுதான் உச்சைச்ரவஸுடைய பெண்ணிடத்தில்
ஆசைகொண்டிருப்பதைத் தன் புத்ரனிடத்தில் சொல்ல
வெட்கபபட்டுத் தன் கவலையை வேறுவிதமாக ஜாடையாய்த்

தெரிவித்தான். "குழந்தாய்! நீ சொன்னபடி நான் துக்கப்பட்டுக் கொண்டிருப்பது நிஜமே. லோகமெங்கும் வ்யாபிக்கும் கீர்த்தியையுடைய நமது சந்த்ரவம்சத்தை விளங்கச் செய்ய நீ ஒருவனே இருக்கிறாய். ஸகல ராஜலக்ஷணங்களும் பொருந்தி, அழகிலும் பலத்திலும் பராக்ரமத்திலும் அஸ்த்ரசஸ்த்ரப் பயிற்சியிலும் ஞானத்திலும் ஆசாரத்திலும் நிகரற்றவனாயிருக்கிறாய். உனக்கு ஏதாவது அபாயம் நேர்ந்தால் நமது குலமே நசிக்கும். ஒருவனுக்கு ஒரே புத்ரன் இருப்பதும் இல்லாததும் ஒன்றுதான். ஒற்றைக்கண்ணிருப்பதும் குருடாயிருப்பதும் ஒன்றே. கண்ணிழந்தால் தேஹம் அழியும்; புத்ரன் நாசமடைந்தால் குலம் அழியும். நூறு புத்ரர்களைக் காட்டிலும் நீயே மேலானவன். நான் இதற்காக மறுபடியும் விவாஹஞ்செய்துகொள்ள விரும்பவில்லை. நமது ஸந்ததி இத்துடன் நாசமடையக்கூடாதென்ற கவலையை மாத்ரம் கொண்டிருக்கிறேன். நீ இதற்காக வருத்தமடையவேண்டாம். வேதங்களைக் கற்பதும் யாகங்களைச் செய்வதும் வ்ரதங்களை முடிப்பதும் நல்ல புத்ரனைப் பெறுவதற்கு ஈடாகாது. ஸந்ததியில்லாவிட்டால் பித்ருக்களின் கடன் தீராது. நீயோ மஹாசூரன்; அவமானத்தைத் தாங்காதவன்; ஆகையால் உனக்கு யுத்தத்தில் அபாயம் நேர்ந்தாலொழிய வேறு பயமில்லை. அதைத் தவிர எனக்குவேறு கவலையுமில்லை"யென்றான்.

தேவவ்ரதர் தன்பிதாவின்எண்ணங்களைப் பூர்ணமாய்த் தெரிந்துகொண்டு சற்று ஆலோசித்து, அவருடைய ஸாரதியை அழைத்து "நீ என் பிதாவுடன் வெளியில் போகும்பொழுதுஅவருக்கு எந்தப்பெண்ணிடத்தில்ப்ரியமுண்டாயிற்று? நிஜத்தைச் சொல். அவருடைய எண்ணத்தை நிறைவேற்ற விரும்புகிறே"னென்றார். அதற்கு அந்த ஸாரதி "ஸ்வாமி!

யமுனைக்கரையில் ஒரு பெண் ஓடம் விட்டுக்கொண்டிருக்கிறாள். அவளைக் கண்டு மஹாராஜா ஆசைகொண்டு அவளுடைய தகப்பனிடத்தில் சென்று அவளைத் தனக்குப் பார்யையாகக் கொடுக்கும்படி கேட்டார். அதற்கு அவன் 'இவளுக்குப் பிறக்கும் புத்ரனுக்கே உமது ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டும்; அப்படி இஷ்டமிருந்தால் என் பெண்ணை விவாஹஞ்செய்துகொள்ளு' மென்றான். ராஜதர்மத்தையும் தங்களிடத்தில் வைத்த ப்ரியத்தையுமே மேலாகக் கொண்ட அரசன் அதற்கு ஸம்மதிக்காமல் வந்துவிட்டார். அவர் கவலைகொண்டிருப்பதற்கு இதே காரணமென்றெண்ணுகிறே" னென்றார்.

பீஷ்மர் அதைக்கேட்டுத் தான் செய்யவேண்டிய காரியத்தை நன்றாக நிச்சயித்துக்கொண்டு யமுனைக்கரைக்குட் போய் உச்சைச்ரவஸைக் கண்டு ஸத்யவதியைத் தன் பிதாவிற்குப்பார்யையாகக் கொடுக்கும்படி கேட்டார். "ஸ்வாமி! இவளை மஹாராஜாவிற்குப் பார்யையாகக் கொடுப்பதில் எனக்கு ஆக்ஷேபமில்லை. ஆனால் இவளுக்குப் புத்ரன் பிறந்தால் அவனுக்கே இந்த ராஜ்யம் கிடைக்கவேண்டும். தாங்கள் சந்தனுவிற்குமூத்த புத்ரராயிருக்கிறீர்கள். நான் தங்களிடத்தில் என்ன சொல்வேன். எனக்கோ இந்த வரன் கிடைப்பது அரிது. மஹாராஜாவிற்கும் இவ்விதமானபார்யை ஸுலபமாய்க்கிடைக்கமாட்டாள். இவள் என்பெண்ணல்ல. உபரிச்வரஸின் புத்ரி; அவர் மஹாராஜாவைப் பற்றி என்னிடத்தில் தர்மாத்மாவான சந்தனுவே இந்த ஸத்யவதியை விவாஹஞ் செய்யத் தகுந்தவரென்று பலமுறை சொல்லியிருக்கிறார். என் கோறிக்கையை இவள் முன்னமே அரசனிடத்தில் தெரிவித்திருக்கிறாள். ரிஷிச்ரேஷ்டரான அஸிதரென்ற தேவர்ஷி இவளை விவாஹஞ் செய்துகொள்ள விரும்பினார்.

அவரையும் நான் மறுத்துவிட்டேன். தங்கள் பிதா நான் சொன்ன நிபந்தனைக்கு சம்மதிக்காததால் அவரையும் மறுத்துவிட்டேன். தங்களுக்கு இந்த ராஜ்யம் ந்யாயமாய்க் கிடைக்கவேண்டியிருப்பதால் ஸத்யவதிக்குப் பிறக்கும் புத்ரனுக்குக் கிடைக்க ந்யாயமில்லை. அவனுக்குத் தாங்களே எதிரியாயிருப்பீர். தங்கள் கோபத்திற்குப் பாத்ரனாய் ஒருவன் பிழைக்க முடியுமோ? இந்த விஷயத்தில் என்னால் யாதொரு தடையிருப்பதாய் நினைக்கக்கூடாது. இதைக் காட்டிலும் ஸ்பஷ்டமாய் தங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை" யென்றான். அதைக் கேட்டுப் பீஷ்மர் "மர்மமறிந்தவனே! நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். என்னைப்போல் அந்தவார்த்தையைச் சொல்லுகிறவன் இதுவரையில் பிறந்ததுமில்லை; பிறக்கப்போகிறதுமில்லை. நீ கேட்டபடியே செய்யப்போகிறேன். இந்த ஸத்யவதிக்குப் பிறக்கும் புத்ரன் எவனோ அவனே எங்களுக்கு அரசனாயிருப்பானெ"ன்றார். ஆனால் உச்சைஸ்ரவர் அதனால் திருப்தியடையாமல் "பரதச்ரேஷ்ட! தங்கள் பிதாவின் இஷ்டத்தை நிறைவேற்றும் விஷயத்தில் யாரும் செய்யத் துணியாத கார்யத்தைச் செய்ய விரும்புகிறீர். சந்தனு சக்ரவர்த்திக்கும் ஸத்யவதிக்கும் பரம ஸந்தோஷத்தைக் கொடுக்கப்போகிறவரும் தாங்களே. அவர்களுடைய ஆயுஷ்காலம் ஆனந்தமாய்க் கழிவதும் துக்கத்தால் நிறைந்திருப்பதும் தங்கள் கையிலிருக்கிறது. கன்யையைச் சேர்ந்தவர்கள் அவளிடத்தில் [illegible] ப்ரியத்தைக் காரணமாகக் கொண்டு நான் ஒரு வார்த்தை சொல்லத் துணிகிறேன். தாங்கள் செய்தப்ரதிக்ஞை தங்களுக்கே தகும். லோகங்களின் ஒழுங்கு தவறினாலும் தங்கள் வார்த்தை தவறாது. தாங்கள் இப்பொழுது சொல்லுகிறபடியே ராஜ்யத்தில் தங்களுக்குள்ள பாத்யத்தை விட்டுக்கொடு

த்து ஸத்யவதியின் புத்ரனுக்குப் பட்டங்கட்டி அவனை அரச னைகச் செய்து காப்பாற்றுவீர். ஆகையால் தங்களிடத்தில் எனக்குக் கொஞ்சமேனும் ஸந்தேஹமில்லை. ஆனால் தங்க ளுக்குப் பிற்காலத்தில் வரும் ஸந்ததியார்கள் இப்படியே உறுதியாயிருப்பார்களென்று எப்படிச் சொல்ல முடியும்? ஆகையால் அவர்கள் விஷயத்தில் மாத்ரம் எனக்கு ஸந்தே ஹமுண்டாயிருக்கிற" தென்றான்.

---

## பீஷ்மப்ரதிக்ஞை.

தேவவ்ரதர் உச்சைச்ரவாவுடைய அபிப்ராயத்தை நன்றாய் ஆலோசித்து, ஸத்யத்தையும் தர்மத்தையும் முக்ய மாய்க் கொண்டு, தன் பிதாவின் இஷ்டத்தை எப்படியா வது நிறைவேற்றுவதே பரமதர்மமென்று நிச்சயித்து அவ னைப் பார்த்துக் "கீர்த்திசாலியே! உனக்குத் தோன்றின ஸந்தேஹம் எனக்கும் தோன்றாமலிருக்குமா? ஆகையால் அதற்குப் பரிஹாரத்தையும் முன்பே நான் ஆலோசித்து நிச்சயித்திருக்கிறேன். இங்கிருக்கும் ஜனங்களும் ரிஷி களும் தேவர்களும் கண்ணிற்குத் தெரியாத ஜீவகோடி களும் நான் செய்யும் ப்ரதிக்ஞையைக் கேட்கட்டும். இப் படி வேறொருவரும் இதுவரையில் செய்யவில்லை; இனி செய்யப்போகிறது மில்லை. என் பிதாவின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்வதற்காக இந்த ராஜ்யம் முழுவதையும் விட் டேனென்று உன்னிடத்தில் முன்னமே சொல்லியிருக்கி றேன். அது நான் ஸம்பந்தப்பட்டவரையில் நிஜமாயிற்று. நீயும் அதை ஒப்புக்கொண்டிருக்கிறாய். ஆனால் எனக் குப் பின் வரும் என் ஸந்ததியார்களிடத்தில் உனக்கு அந்த நம்பிக்கையில்லை. அது ந்யாயமே. அந்த ஸந்தேஹத் தையும் தீர்ப்பதற்காக இப்பொழுது ப்ரதிக்ஞைசெய்கி

றேன். இன்று முதல் நான் ப்ரஹ்மசாரியாயிருப்பேன்: விவாஹஞ்செய்துகொள்வதில்லை. ஆகையால் என் ஸந்ததியார் நான் செய்த ப்ரதிக்ஞையை நிறைவேற்றுவார்களோ வென்ற பயத்தை விடு. எனக்குப் புத்ரனில்லாமல் போனாலும் ஸந்ததியில்லாதவர்களுக்கு நேரும் நரகம் கிடையாது. ஒருவராலும் அடைய முடியாத உத்தமலோகங்கள் எனக்கு ஸுலபமாய்க் கிடைக்கும். நான் பிறந்ததுமுதல் இதுவரையில் பொய் சொன்னதில்லை, இனி சொல்லப் போவதுமில்லை. ஆகையால் பயமில்லாமல் நீ உன் பெண்ணை மஹாராஜாவிற்கு விவாஹஞ்செய்துகொடுக்கலாம். நான் இன்று முதல் ஸ்த்ரீகளின் சேர்க்கையைத் துறந்தேன்; நைஷ்டிகப்ரஹ்மசர்யத்தை அனுஷ்டிப்பே"னென்றார். உச்சைச்ரவா அதைக் கேட்டவுடன் "புருஷச்ரேஷ்ட! தங்களுக்கு நமஸ்காரம். என் அபராதத்தை மன்னிக்கவேண்டும். ஸத்யவதியைச் சந்தனு மஹாராஜாவிற்குப் பார்யையாகக் கொடுத்துவிட்டேன். பெற்றுக்கொள்ளுங்க" ளென்றான். அப்பொழுது ஆகாசவீதியிலிருந்து தேவகணங்களும் ரிஷிகளும் அப்ஸரஸ்களும் பீஷ்மரைப் புஷ்பவர்ஷங்களால் பூஜித்தார்கள். "இதுவரையில் ஒருவரும் செய்யத்துணியாத கார்யத்தை அலக்ஷ்யமாய் விளையாட்டாய்ச் செய்த இவர் எல்லோராலும் பயப்படத்தக்கவரெ"ன்றார்கள். ஆகையால் அவருக்கு அன்றுமுதல் பீஷ்மரென்ற பெயர் வாய்ந்தது.

பிறகு பீஷ்மர் உச்சைச்ரவாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன் தாயாகிய ஸத்யவதியை ப்ரதக்ஷிண நமஸ்காரம் பண்ணி "அம்மா! இந்தத் தேரில் தயவுசெய்து ஏறவேண்டும். நமது அரண்மனைக்குப் போவோ" மென்று ஹஸ்தினபுரத்திற்கு வந்து, தன் பிதாவிடத்தில் சென்று

நமஸ்கரித்து "ஸ்வாமி! தங்களுடைய ஆக்ஞைப்படி உச்சைச்ரவாவைக் கண்டு அவனுடைய மனஸைத் திருப்தி செய்து என் தாயான ஸத்யவதியம்மாளை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறே" னென்று வணக்கமாய்த் தெரிவித்தார். தூதர்களால் ஸகல விருத்தாந்தங்களையும் தெரிந்து கொண்ட சந்தனு—தான் ஒரு பெண்ணிடத்தில் கொண்ட ஆசையைத் தன் புத்ரன் நிறைவேற்றினதால் வெட்கமடைந்தான். தன் எண்ணம் நிறைவேறினதால் ஆனந்தமடைந்தான். பிதாவின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்வதில், யாரும் விரும்பத்தகுந்ததும் விடுவதற்குத் துணியாததுமான ஸ்த்ரீஸௌகத்தையும் ஸந்ததி வேண்டுமென்ற ஆசையையும் துரும்பாய் நினைத்துத் தள்ளிவிட்ட தன் புத்ரனுடைய தர்மபுத்தியை நினைத்து நினைத்து மகிழ்ந்து கொண்டாடினான். இவ்விதமான மஹாத்மாவிற்குத் தான் பிதாவாயிருக்கும் பாக்யம் தனக்குக் கிடைத்ததைப் பற்றி மஹாபுண்யவானாய்த் தன்னை நினைத்துக்கொண்டான். ஒரு ஸ்த்ரீயிடத்தில் தான் வைத்த ஆசையை ஒழிக்க முடியாமல் போனதையும் பிதாவின் ஸந்தோஷத்தையே பரம தர்மமாய்க் கொண்ட தன் புத்ரன் பெண்ணாசையை என்றென்றும் துறந்ததையும் நினைத்து, இப்படிப்பட்ட மஹானுபாவனுக்குத் தான் பிதாவென்று சொல்லத் தகுமாவென்று ஸந்தேஹித்து வெட்கமடைந்தான். தன் புத்ரனுடைய வைராக்யத்தையும் தர்மபுத்தியையும் மனவுறுதியையும் கண்டு பயந்தான். "இவன் மனுஷ்யனல்ல; வஸுக்களில் ஒருவருடைய அவதாரமே" யென்று கங்கை முன்பு தனக்குச் சொன்ன தேவரஹஸ்யம் ஞாபகத்திற்கு வந்தது. பீஷ்மரிடத்தில் மனுஷ்ய புத்தியை நீக்கிப் பயத்தையும் பக்தியையும் கொண்டான். தன் புத்ரனாலேயே

தனக்கு நல்ல கதியும் உத்தமலோகங்களும் கிடைக்கு மென்று நினைத்து மயிர்க்கூச்சலடைந்தான். பூமியிலுள்ள அரசர்கள் இந்த விருத்தாந்தத்தைக்கேட்டுப் பீஷ்மரை ராஜச்ரேஷ்டராயும் தர்மமூர்த்தியாயும் ப்ரளயகாலாக்னி போல் நெருங்கக்கூடாதவராயும் நிச்சயித்தார்கள்.

---

## பீஷ்மர் சிரஜீவிப்பட்டம் பெற்றது.

சந்தனு தனக்குத் தன் புத்ரன் செய்த உபகாரத்திற்குத் தான் என்ன பதில் உபகாரம் செய்யலாமென்று வெகுகாலம் ஆலோசித்து முடிவில், "நம்மால் அவனுக்கு ஆகவேண்டியது என்ன? எதையாவது அவன் விரும்பினாலல்லவா அதை நான் கொடுக்க நினைக்கலாம். நிகரற்ற வைராக்ய முள்ள ப்ரஹ்மஞானியை நான் எவ்விதமாய்த் திருப்தி செய்ய முடியும்? அவன் நம்மிடத்தில் விரும்பும் வரம் யாதொன்றுமில்லை. நான் அவனுக்குக் கொடுக்கக் கூடியதும் யாதொன்றுமில்லை: ஆகையால் ஸகல லோகங்களுக்கும் ஸகல ஜீவகோடிகளுக்கும் ஸகல விதத்தினும் பரம உபகாரத்தைச் செய்வதையே ஸ்வபாவமாகக் கொண்ட இந்த மஹானுபாவன் பூமியில் காலமுள்ளவரையில் இருப்பதே எல்லோருக்கும் க்ஷேமம். எல்லோரும் விரும்பக்கூடியதும் அதேயென்று நிச்சயித்துப், பீஷ்மரைத் தழுவித்துக் 'குழந்தாய்! மஹானுபாவ! நீ என்னிடத்தில் வைத்திருக்கும் ப்ரீதியையும் பக்தியையும் நீ எனக்குச் செய்த உபகாரத்தையும் நினைக்கும்பொழுது அதற்குப் பதிலாய் நான் உனக்குச் செய்யக்கூடியது யாதொன்று மில்லை. ஆகையால் நான் உனக்கு வரங்கொடுப்பதை ஓர் வெளிப்படையான காரணமாய் வைத்துக்கொண்டு ஸகல லோகங்கள் விரும்பக்கூடிய ஓர் க்ஷேமத்தைச்

செய்யப்போகிறேன்—லோகத்தில் ஜனங்களுக்குப் பல கஷ்டங்கள் நேரும். பல பயங்கள் உண்டாகும். அவைக ளெல்லாம் புத்தியாலும் த்ரவ்யத்தாலும் மணிமந்த்ர ஔஷ தங்களாலும் மனுஷ்ய ஸஹாயத்தாலும் தீரும். ஆனால் இவை யாதொன்றும் ப்ரயோஜனப்படாத ஓர் விஷய முண்டு. அதாவது மரணபயமே. அந்தப் பயம் உனக்கு ஒருநாளும் நேராமலிருக்கட்டும். யாரையும் வசப்படுத்தித் திடீரென்று கொண்டுபோகும் மிருத்யு உனக்கு அடிமை யாயிருக்கட்டும். உனக்கு வசப்படட்டும். உன் இஷ் டத்தை எதிர்பார்க்கட்டும். உனக்கு இந்தத் தேஹத்தை விடவேண்டுமென்று எப்பொழுது தோன்றுகிறதோ அப் பொழுதே உனக்கு மரணம் நேரட்டும். இந்தத் தேஹத் தால் ஆகவேண்டிய கார்யங்களைச் செய்து முடித்து, இனி இந்தத் தேஹம் நமக்கு வேண்டியதில்லையென்ற நிச்சயம் எப்பொழுது உண்டாகிறதோ, அப்பொழுதே இந்தத் தேஹத்தை விடும் ஸ்வாதீனம் உனக்கு உண்டாகட்டும். யமனுக்கு உன்னிடத்தில் கொஞ்சங்கூட அதிகாரமிருக் காது. உன் இஷ்டத்தை அவன் அனுஸரிக்கக்கடவ" னென்றான். வெளிப்படைக்கு உச்சைஸ்ரவாவுடைய புத்ரி யாக எல்லோர்க்கும் காணப்பட்ட ஸத்யவதி, நிஜமாய் உபரிச்ரவஸென்ற சேதிதேசத்தரசனுக்குப் பிறந்தவ ளென்றும், செம்படவர்களால் வளர்க்கப்பட்டவளென்றும், சந்தனு அறிந்தபடியால் அவளைச் சாஸ்த்ர விதிப்படித் தர்ம பத்னியாய் விவாஹஞ்செய்துகொண்டான்.

---

### சித்ராங்கதன்.

காலக்ரமத்தில் அவனுக்கு ஸத்யவதியிடத்தில் சித் ராங்கதன் விசித்ரவீர்யனென்ற புத்ரர்கள் பிறந்தார்கள்.

விசித்ரவீர்யனுக்கு யௌவனம் வருவதற்கு முன்னமே சந்தனு சக்ரவர்த்தி தன் முன்னோர்களுடைய வழக்கப்படி இவ்வுலகத்தை விட்டு ஸ்வர்க்கலோகத்தில் இந்த்ரஸபையில் வஸிக்கச் சென்றான். பிறகு ஸத்யவதியின் அபிப்ராயப்படி பீஷ்மர் சித்ராங்கதனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்தார். அவன் மனுஷ்யர்களையும் தேவர்களையும் அஸுரர்களையும் யுத்தத்தில் ஜயித்து நிகரற்ற பராக்ரமசாலியாய் விளங்கினான். பிறகு ஒருநாள் சித்ராங்கதனென்று பெயருள்ள கந்தர்வராஜன் ஒருவன் அவனிடத்திற்கு வந்து, “ராஜகுமார! நீ என் பெயருள்ளவனாயிருக்கிறாய். உன் வீர்யத்தைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தேன். ஆகையால் உன்னுடன் யுத்தஞ்செய்ய விரும்புகிறேன். அந்த ஸந்தோஷத்தை எனக்குக் கொடுப்பாயென்றெண்ணுகிறேன். ஒரே பெயருள்ள நாம் இருவருமிருப்பதால் அநேக கெடுதிகளுண்டாகும். ஆகையால் இந்தப் பெயரைப் பெருமையுடன் காப்பாற்றுவதற்கு ஒருவனே போது” மென்றான். இப்படித் தன்னைப் பரிஹாஸஞ்செய்து யுத்தத்திற்கழைத்த அந்தக் கந்தர்வராஜனைச் சித்ராங்கதன் துரும்பாய் நினைத்து, ஹிரண்யவதியென்ற நதிக்கரையில் அவனுடன் மூன்று வர்ஷங்கள்வரையில் கோரயுத்தஞ்செய்தான். முடிவில் அந்தக் கந்தர்வன் தன் மாயாபலத்தால் சந்தனுவின் புத்ரனைக் கொன்றான்.

---

### விசித்ர வீர்யனுடைய விவாஹம்.

தன் புத்ரனுடைய மரணத்தால் மிகுந்த துக்கத்தையடைந்த ஸத்யவதியைப் பீஷ்மர் தேற்றி, விசித்ரவீர்யனை ராஜ்யாபிஷேகம் செய்வித்து, அவன் சிறுவனாயிருந்தபடியால் தானே ராஜகார்யங்களை நடத்திவந்தார். விசித்ர

வீர்யனுக்கு யௌவனம் வந்தபொழுது, அவனுக்கு விவாஹம் செய்விக்க விரும்பித் தகுந்த கன்யைகளை விசாரித்துக் கொண்டிருக்கையில், காசிதேசத்தரசனுடைய மூன்று புத்ரிகள் ஸ்வயம்வரம் ஏற்படுத்தினதைக் கேள்விப்பட்டுத், தன் தாயிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு தான் ஒண்டியாய் அந்த ஸ்வயம்வரத்திற்குச் சென்றார். காசீ கோஸலம் வங்கம் புண்ட்ரம் கலிங்கம் முதலிய தேசத்து அரசர்கள் அந்தப் பெண்களின்மேல் ஆசைகொண்டு அங்கே கூட்டமாக வந்திருந்தார்கள். மற்ற அரசர்களின் பெயர்களும் பிருதுகளும் எடுத்துக் கூறப்படும்பொழுது பீஷ்மர் தனியே இருக்கக்கண்டு, அந்த ராஜகுமாரிகள் அவரைக் கிழவரென்று அலக்ஷ்யஞ்செய்து ஒதுங்கிப்போனார்கள். அங்குவந்த அரசர்கள் அறியாத்தனத்தாலும் கர்வத்தாலும், அவரைப் பார்த்து "வயஸ் சென்று, நரை மிகுந்து, தேஹம் ஒடுங்கின இந்தப் பீஷ்மர் ஸகல தர்மங்களையும் அறிந்தும் அகாலத்தில் பெண்ணாசைகொண்டு தான் செய்த ப்ரதிக்ஞையைப் பொய்யாக்குகிறாரே" யென்று இகழ்ந்து பேசிப் பரிஹாஸஞ்செய்தார்கள். அதைக் கண்டு பீஷ்மர் கோபித்து, அந்தக் கன்யைகளை தானே வரித்து தலைதெரியாத கர்வங்கொண்டிருந்த அரசர்களைப் பார்த்துக் கர்ஜித்து "வீரர்களே! லோகத்தில் விவாஹ விதி பலவகையாய் ஏற்பட்டிருக்கிறது. உத்தமகுணமுள்ளவர்களைக் கன்யையின் பிதா உபசரித்து அழைத்துத் தன்னால் கூடிய த்ரவ்யத்தைக் கொடுத்துக் கன்யையை அலங்காரத்துடன் அவனுக்குப் பார்யையாகக் கொடுப்பது ப்ராஹ்ம விவாஹமென்று சொல்லப்படுகிறது. இரண்டு பசுக்களைச் சுல்கமாய் வாங்கிக்கொண்டு கன்யையைக் கொடுப்பது ஆர்ஷ விவாஹமாகும். குறிப்பிட்ட த்ரவ்யத்தைப்

பெற்றுக்கொண்டு கன்யையைக் கொடுப்பது ஆஸுர விவாஹம். கன்யையும் வரனும் ஒருவர்க்கொருவர் ஆசை கொண்டு மனஸ் ஒத்து விவாஹஞ்செய்வது காந்தர்வ மெனப்படும். கன்யை தூங்கிக்கொண்டிருக்கும்பொழுதும் மயங்கியிருக்கும்பொழுதும் அவளை அபஹரித்துக் கொண்டுபோவது பைசாச மெனப்படும். தாய் தகப்பனுடைய அனுமதியைப் பெற்றுக் கன்யையைத் தானே விவாஹஞ் செய்துகொள்வது ப்ராஜாபத்ய மெனப்படும். வேதத்தில் சொல்லியிருக்கும் யக்ஞவிதிகளின்படி கன்யையை விவாஹஞ் செய்துகொள்வது தைவமெனப்படும். ஆனால் கன்யையின் பந்துக்களையும் காவலாளிகளையும் யுத்தத்தில் சிதறவடித்து அவளைப் பலாத்காரமாய்க்கொண்டு போவதென்ற ராக்ஷஸ விவாஹமே க்ஷத்ரியர்களால் கொண்டாடப்படுகிறது. மேலும் ராஜபுத்ரர்கள் ஸ்வயம்வரத்தில் தங்களுடைய சௌர்யத்தைக் காட்டிக் கன்யைகளை விவாஹஞ்செய்வதே ச்லாக்யமானது. ஆகையால் இந்தக் கன்யைகளை நான் உங்களுக்கு நடுவிலிருந்து பலாத்காரமாய்க் கொண்டுபோகிறேன். உங்களால் கூடியவரையில் என்னைத் தடுங்க"ளென்று சொல்லி அந்தப் பெண்களைத் தன் ரதத்திலேற்றிக்கொண்டு ஹஸ்தினபுரத்தை நோக்கிச் சென்றார். பிறகு மற்ற அரசர்கள் ஒன்றுசேர்ந்து ஆயுதபாணிகளாய் ரதங்களில் பீஷ்மரைப் பின்தொடர்ந்து அவரைத் துரத்திக்கொண்டு கோரயுத்தஞ்செய்தார்கள். ஆனால் பீஷ்மர் அவர்களுடைய வில்லுகளை ஒடித்துத் தேர்களை நொறுக்கி ஆயுதங்களைப் பொடியாக்கித் தலைகளை அறுத்தார். இப்படித் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு எதிரிகளை நாசஞ்செய்து அந்தப் பெண்களுடன் ஹஸ்தினபுரத்தை நோக்கி வந்தார். ஆனால் சால்வராஜன் மாத்

ரம் பீஷ்மரைவிடாமல் பின்தொடர்ந்து யுத்தஞ்செய்து கொண்டே வந்தான். அதைக் கண்டு பீஷ்மர் ரதத்தைத் திருப்பி அவனுடன் நெடுநேரம் யுத்தஞ்செய்து, அவனுடைய குதிரைகளையும் ரதத்தையும் அழித்து, அந்தப் பெண்களிடத்தில் அவன் வைத்திருந்த மிகுந்த ஆசையைக் காரணமாய்க் கொண்டு அவனைக் கொல்லாமல் உயிரோடு விட்டார்.

---

## அம்பா சரித்ரம்.

பிறகு தன் ஸஹோதரிகளைப்போலவும் மருமக்களைப் போலவும் புத்ரிகளைப்போலவும் அந்தக் கன்யகளை நினைத்து, அவர்களைத் தன் ஸஹோதரனான விசித்ரவீர்யனுக்கு விவாஹஞ்செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது காசீராஜனுடைய மூத்த பெண்ணான அம்பை, பீஷ்மரைப் பார்த்துச் சிரித்து "ஸ்வாமி! நான் ஸௌபலதேசத்தரசனான சால்வனைப் பர்த்தாவாய் முன்னமே என் மனஸால் வரித்துவிட்டேன். அவரும் முன்பே என்னை வரித்திருக்கிறார். என் பிதாவும் அவருக்கே என்னைக் கொடுப்பதாய் நிச்சயித்திருந்தார். இந்த ஸ்வயம்வரத்தில் நான் அவரையே வரிப்பதற்கு ஸித்தமாயிருந்தேன். என் அபிப்ராயத்தைக் கேட்டபிறகு எது த்ர்மமோ அதைச் செய்யக்கடவீரெ"ன்றாள். ப்ராஹ்மணர்கள் கூடியிருக்கும் ஸபையில் அந்தக் கன்யை இப்படிச் சொன்னபொழுது பீஷ்மர் அதை அங்கீகரித்து "இவள் வேறு புருஷனிடத்தில் ஆசைவைத்திருக்கிறாள். கன்யையைப் பிதா ஒருவனுக்குக் கொடுக்கிறேனென்று வாக்தானஞ் செய்துவிட்டாலும், அவளே ஒரு புருஷனைப் பர்த்தாவென்று மனஸால் வரித்தாலும், விவாஹத்திற்கு விதிக்கப்பட்ட மந்த்ரங்கள்

சொல்லப்பட்ட பிறகும் அந்தக் கன்யை வேறு புருஷனுக்கு விவாஹஞ்செய்துகொடுக்கத் தகுந்தவளல்லவென்று சாஸ்த்ரம் சொல்லுகிறபடியால் இவள் விவாஹமானவளே" யென்று மற்ற ப்ராமணர்களுடன் ஆலோசித்து விசித்ர வீர்யனுடைய அனுமதியைப்பெற்று, அந்த அம்பை யென்றவளை ரதத்திலேற்றி அவளுடைய பிதாவிடத்திற்கு அனுப்பினர். பிறகு அம்பிகை, அம்பாலிகை யென்ற கன்யைகளை விசித்ரவீர்யனுக்கு விவாஹஞ்செய்வித்தார்.

---

## அம்பையின் கஷ்டம்.

சால்வராஜனைப் பர்த்தாவாய் விரும்பின அம்பை பீஷ்மரால் தள்ளப்பட்டுத் தன் தோழிகளுடன் சால்வனிடத்திற்குச் சென்று அவனை நமஸ்கரித்து, "நீ முன்பே என்னைப் பார்யையாய் மனஸால் வரித்திருக்கிறாய். நானும் உன்னை அப்படியே வரித்திருக்கிறேன். என் பிதாவும் இதற்கு ஸம்மதித்திருக்கிறார். என்னை ஸ்வயம்வரத்தில் பலாத்காரமாய்க் கொண்டுபோன பீஷ்மரிடத்தில் நான் இந்த விஷயத்தைத் தெரிவித்து அவரால் உத்திரவு கொடுத்தனுப்பப்பட்டு உன்னிடத்தில் வந்திருக்கிறேன். ஆகையால் நீ என்னை விவாஹஞ்செய்துகொள்" ளென்று ப்ரார்த்தித்தாள். அதைக் கேட்டுச் சால்வன் சிரித்துக்கொண்டு "பெண்ணே! அரசர்களுக்கெதிரில் என்னை யுத்தத்தில் ஜயித்துப் பீஷ்மர் உன்னை வசப்படுத்திக்கொண்டார். அவரால் கொண்டுபோகப்பட்டு மறுபடியும் வேண்டாமென்று விலக்கப்பட்ட உன்னை நான் அங்கீகரிக்கமாட்டேன். நீ அவருடைய பொருளாய்விட்டாய். நீ அங்கேயே போகவு" மென்றான். அதைக் கேட்டு அம்பை பீஷ்மரிடத்தில் வந்து "என்னை ஸ்வயம்வரத்தில் பலாத்காரமாய் எடுத்துக்

கொண்டுவந்த நீரே என் பர்த்தா; க்ஷத்ரியர்களுடைய தர்மமும் இதே. ஆகையால் என்னை இப்பொழுதே விவாஹஞ் செய்துகொள்ளவேண்டு" மென்றாள். பீஷ்மர் "பெண்ணே! அதெப்படி முடியும்? நான் ஸ்த்ரீயை விவாஹகஞ் செய்வதில்லை யென்று வெகு காலத்திற்கு முன்பே ப்ரதிக்ஞை செய்துவிட்டேன். அதைத் தவறமாட்டே" னென்றார். அப்படிச் சொல்லியும் அம்பை அவரை விடாமல் ஆறு வர்ஷங்கள்வரையில் பின் தொடர்ந்தாள். அப்பொழுது பீஷ்மர் "பெண்ணே! நீ இங்கிருப்பதில் ப்ரயோஜனமில்லை. நான் உன்னை விவாஹஞ்செய்துகொள்ள முடியாது. விசித்ரவீர்யனும் உன்னைப் பார்யையாய் அடைய விரும்பவில்லை. நீ சால்வனிடத்திற்கே போகலா" மென்றார். இப்படி பீஷ்மரிடத்திலிருந்து சால்வனிடதிற்கும் அவனால் மறுக்கப்பட்டு பீஷ்மரிடதிற்கும் போக்கு வரத்தாய் அம்பை ஆறு வர்ஷங்கள்வரையில் அலைந்துகொண்டிருந்தாள்.

---

அம்பை பீஷ்மரைக்கொல்ல வழிதேடினது.

பிறகு ஹிமயமலைச்சாரலில் பாஹுதாவென்ற நதிக்கரையில் பீஷ்மரைக் கொல்வதற்காக கோரமான தபஸ் செய்து ஸ்கந்தரை ஸந்தோஷப்படுத்தி அவரிடத்திலிருந்து ஓர் அழகான மாலையைப் பெற்றாள். அப்பொழுது அவர் "பெண்ணே! தாமரைப்புஷ்பங்களால் செய்யப்பட்ட இந்தத் தேவலோகதது மாலை உன் துக்கத்தைத் தீர்க்கும். இதை யார்தரிக்கிறாரோ அவன் பீஷ்மருடைய மரணத்திற்குக் காரணமாவா" னென்று மறைந்தார். பிறகு அம்பை ஆர்யாவர்த்தத்திலுள்ள ஒவ்வொரு தேசத்திற்கும் சென்று அதின் அரசனைக் கண்டு "மஹாராஜ! நான் காசி தேசத்து

ராஜனுடைய புத்ரி; என் பெயர் அம்பை. குருகுலத்து அரசனை பீஷ்மன் என்னையும் என் தங்கைகளையும் ஸ்வயம்வரத்தில் ஜயித்துக் கொண்டுபோனன். பிறகு நான் சால்வனை விவாஹஞ்செய்துகொள்வதாய் நிச்சயித் 'திருந்தே' னென்று தெரிவித்தவுடன் என்னை அவனிடத் திற்குப் போகும்படி விட்டுவிட்டான். அந்த மூடனை சால்வனே நான் வேறொரு புருஷனை அடைந்தவளென்று நினைத்து என்னை அங்கீகரிக்காமல் தள்ளிவிட்டான். இப் படி அவனையும் பீஷ்மனையும் அநேக வர்ஷங்களாய் ப்ரார்த் தித்தும் என் எண்ணம் நிறைவேறவில்லை, பிறகு மஹா தேவனைக்குறித்து தபஸ்செய்து அவரிடத்திலிருந்து இந் தத் தேவலோகத்து மாலையைப் பெற்றிருக்கிறேன் இதை அணிந்தவன் பீஷ்மனைக் கொல்வான். பதியில்லா மல் தர்மத்தைவிட்டுச் சொல்லமுடியாத துக்கத்தை யும் கஷ்டத்தையும் அனுபவித்துக்கொண்டு தேச தேசமாய்த் திரிந்து பராக்ரமசாலிகளான க்ஷத்ரியர் களை ப்ரார்த்திக்கிறேன். இந்த மாலையைத் தரித்துக் கொள்ளுங்கள்; பீஷ்மரைக் கொல்லுங்கள். என்னை விவா ஹஞ்செய்யுங்க" ளென்று ப்ரார்த்தித்தாள். இப்படி ஐந்து வர்ஷங்கள் கழிந்தன. பீஷ்மரிடத்தில் எல்லோரும் கொண்ட பயத்தால் ஒருவரும் அவளுக்கு ஸஹாயஞ் செய்யவில்லை. பிறகு அம்பை தர்மவானும் வீரனுமான பாஞ்சால தேசத்தரசனை ஸோமகனிடத்திற்குச் சென் ருள். அவனும் அவளுடைய ப்ரார்த்தனைக் கிணங்காமல் மறுத்துவிட, அம்பை வேறுகதியற்று அந்த அரசனுடைய வாசலில் அந்த மாலையை மாட்டிவிட்டுப் போனாள். அதைக் கண்டு த்ருபதராஜன் அவளைப் பின் தொடர்ந்து நல்ல வார்த்தைசொல்லிப் "பெண்ணே! மாலையை எடுத்துக்

கொள். என்குலத்தை அழிக்காதே. பீஷ்மரை எதிர்ப்பவன் யமனுடைய வீட்டில் வாஸத்தை ஏற்படுத்திக்கொண்ட பிறகே அவரைப் பார்க்கவேண்டு” மென்று பலமுறை ப்ரார்த்தித்தான். அம்பை “நான் சொன்னபடியே நீ செய்யவேண்டும். நீயும் நானும் இதில் செய்வது ஒன்று மில்லை. விதி இப்படி ஏற்பட்டிருக்கிறது அதை மாற்ற யாரால் முடியும்? எவன் இந்த மாலையை எடுத்துத் தானே கழுத்தில் போட்டுக்கொள்ளுகிறானோ அவனால் என் சத்ரு வான பீஷ்மனுக்கு மரணமென்று” சொல்லிவிட்டுப் போனாள்.

---

### சிகண்டி.

வெகுகாலம் வரையில் அந்த மாலையை ஒருவனும் எடுக்காமல் த்ருபதன் காப்பாற்றி வந்தான். பிறகு அதை யாரும் எடுக்காததால் கவனிக்காமல் விட்டுவிட்டான். ஒரு நாள் சிகண்டினியென்னும் சிறு பெண் தன் பிதா சொன்னதைக் கவனிக்காமல் மறந்து, வேடிக்கையாய் அந்த மாலையை எடுத்துக் கழுத்தில் போட்டுக்கொண்டாள்; அதைக் கேட்ட அவனுடைய தகப்பன் பீஷ்மருடைய விரோதத்திற்குப்பயந்து அந்தப் பெண்ணைத் தள்ளிவிட் டான். அவள் அங்கிருந்து வேகமாய்க் கங்கை உத்பத்தி யாகுமிடத்தில் தபஸ் செய்துகொண்டிருந்த இஷீகரென்ற ப்ரஹ்மர்ஷியினிடத்தில் போய், அவரை வெகுகாலம் வரை யில் தன் வினயத்தாலும் பக்தியாலும் சுச்ரூஷையாலும் ஸந்தோஷப்படுத்தினாள். அவளுடைய எண்ணத்தை அறிந்த அந்த மஹர்ஷி “பெண்ணே! இவ்விடத்தில் விபஜன மென்ற உத்ஸவம் ஸமீபகாலத்தில் நடக்கும். அப்பொழுது தும்புருவென்ற கந்தர்வராஜன் இங்கே வரு

வான். அவனை உன் பணிவிடையால் திருப்திசெய். நானும் உன்னைப்பற்றி அவனிடத்தில் சிரத்தையுடன் சொல்லுகிறேன். அவனால் உனக்கு நன்மையுண்டாகும். உன் எண்ணம் நிறைவேறு மென்றார். அப்படியே அவ்விடத்தில் விஜயமென்ற கந்தர்வனுடைய உத்ஸவம் நடந்தது. அது முடிந்தவுடன் இதர கந்தர்வர்கள் மாத்ரம் அங்கிருந்தார்கள். அவர்களில் ஒருவன் சிகண்டினியை அழைத்துப் "பெண்ணே! உன் ஸ்திரீரூபத்தைச் சில காலம்வரையில் நான் தரிக்க விரும்புகிறேன். அதைக் கொடுத்து என் புருஷரூபத்தை வாங்கிக்கொள்" ளென்றான். அப்படியே அவர்கள் ரூபங்களை மாற்றிக்கொண்டார்கள். சிகண்டினி அன்று முதல் சிகண்டியென்ற பெயருடன் புஷ்பகமென்ற இடத்திற்குச் சென்று வெகுகாலம் வில்வித்தையைக் கற்று, மனுஷ்ய தேவ கந்தர்வ அஸுரலோகத்து அஸ்திரங்களை அப்யாஸஞ்செய்து ஒப்பற்ற வீரனாய்த் தன் தேசத்திற்கு வந்து, பிதாவை நமஸ்கரித்து "மஹாராஜ! இனி நான் இருக்கும்பொழுது அந்தப் பீஷ்மனிடத்தில கொஞ்சங்கூடப் பயம் வேண்டா" மென்று வீரவாதம் பேசினான்.

---

## அவனுடைய மரணம்

அம்பை தன்னை விரோதித்துக்கொண்டு வெளியில் போன பிறகு, பீஷ்மர் அம்பிகை அம்பாலிகையென்ற கன்யைகளை விசித்ரவீர்யனுக்கு விவாஹஞ்செய்வித்தார். அவன் அதுவரையில் தானிருந்த மாதிரியை மாற்றி, ராஜ்யகார்யங்களைக் கவனிக்காமல் தன் அழகைப்பற்றி எல்லையற்ற கர்வங்கொண்டு காம ஸுகங்களை அனுபவிப்பதிலேயே ஏழு வர்ஷங்களைக் கழித்தான். அப்பொழுது

அவனுக்கு, க்ஷயரோகம் கண்டு எவ்வித சிகித்ஸையும் பயன்படாமல் மண்ணுலகை விட்டு விண்ணுலகம் சென்றான். பீஷ்மரும் ஸத்யவதியும் மற்றுமுள்ளோரும் எல்லையற்ற துக்கமடைந்து அந்த விசித்ரவீர்யனுக்கு ப்ரேதகிருத்யங்களை முறைப்படி செய்வித்தார்கள்.

---

### வம்சவ்ருத்திக்கு உபாயம்

பிறகு ஸத்யவதி தன் மருமக்களைத் தேற்றிக், குருவம்சம் ஸந்ததியில்லாமல் வீணாய் அழிந்துபோவதை நினைத்துக் கவலைகொண்டு, பீஷ்மரை அழைத்துக் "குழந்தாய்! குருவம்சத்தரசனான சந்தனுவுக்கு நல்ல கதியும் கீர்த்தியும் வைதிகக்ரியைகளும் உன்னைப் பொறுத்திருக்கின்றன. புண்ய கர்மங்களைச் செய்தால் ஸ்வர்க்கத்தை அடைவானென்று வேதம் நிச்சயமாய்ச் சொல்லுகிறது. ஸத்யத்தையே பேசுகிறவன் தீர்க்காயுஸுள்ளவனாயிருப்பானென்று ச்ருதிகள் சொல்லுகின்றன. அப்படியே உன்னிடத்தில் தர்மம் குடிகொண்டிருப்பது லோகப்ரஸித்தம். நீ வேத வேதாங்கங்களையும் சாஸ்த்ரங்களையும் கலைகளையும் வித்யைகளையும் கரைகண்டு ஸகல ஞானஸ்வரூபியாய் விளங்குகிறாய். தர்மத்தின் பரம ரஹஸ்யங்களை உன்னைப்போல் அறிந்தவன் யாருமில்லை. ஆகையால் உன்னிடத்தில் எனக்குள்ள ப்ரேமையையும் நம்பிக்கையையும் முன்னிட்டு ஒரு கார்யத்தில் உன்னை நியமிக்கப்போகிறேன். நீ அதை எனக்கு எப்படியாவது முடித்துக்கொடுக்கவேண்டும். என் புத்ரர்கள் இருவரும் ஸந்ததியில்லாமல் இறந்தார்கள். என் மருமக்களாகிய காசிராஜனுடைய பெண்களும் தங்களுக்கு ஸந்ததி வேண்டுமென்று மிகவும் ஆசைகொண்டிருக்கிறார்கள். நீ நமது

வம்சவிருத்தியை உத்தேசித்து இவர்களிடத்தில் புத்ரனை உண்டாக்கக்கடவாய். இது பழைய தர்மம். அதை அனுஷ்டிக்கும்படி என் ஆக்ஞையை ஆதாரமாய்க் கொள். ராஜ்யத்தில் சக்ரவர்த்தியாய் நீ அபிஷேகஞ்செய்து கொண்டு இந்தப் பரதகண்டத்தை ஆளக்கடவாய். தர்மப்படி விவாஹஞ்செய்துகொண்டு பித்ருக்களுக்குப் பரம திருப்தியைச் செய்யக்கடவா"யென்றாள்.

தன் தாயான ஸத்யவதியும் பந்துவர்க்கங்களும் மித்ரர்களும் ப்ரஜைகளும் பலவிதமாய்ப் போதித்தும் ப்ரார்த்தித்தும் பீஷ்மர் தன் தர்மத்தை நிறைவேற்றுவதிலிருந்து தவறாமல் தாயைப் பார்த்து, "அம்மா! தாங்கள் சொல்வது மேலான தர்மமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால் விவாஹத்தைப் பற்றியும் ஸந்ததியைப் பற்றியும் நான் முன்பு தங்களுடைய பிதாவினிடத்தில் செய்த ப்ரதிக்ஞை தங்களுக்கு ஞாபகமிருக்குமே. அது கன்யாசுல்கத்திற்காக நான் செய்ய ஒப்புக்கொண்டதல்லவா? அந்த ப்ரதிக்ஞையைத் தவறக்கூடாது. தவறினால் தங்களுடைய விவாஹம் வ்யர்த்தமாகும். எனக்கும் கோரமான நரகம் கிடைக்கும். ஆகையால் நான் மறுபடியும் தங்களிடத்தில் ப்ரதிக்ஞை செய்கிறேன். தங்களுக்காக மூன்று லோகங்களையும் விடுகிறேன். தேவேந்த்ரனுடைய பதவி கிடைத்தாலும் அதை விடுகிறேன். இவைகளுக்கு மேற்பட்ட பதவி எதிருந்தாலும் அதையும் விடுகிறேன். ஸத்யத்தைக் கைவிட என்னால் முடியாது. பூமி தனக்கு ஸ்வபாவமான வாஸனையை இழக்கட்டும்; ஜலம் ரஸத்தை இழக்கட்டும்; தேஜஸ் ரூபத்தை இழக்கட்டும்; வாயு ஸ்பர்சகுணத்தை இழக்கட்டும்; ஸூர்யன் காந்தியையும், அக்னி உஷ்ணத்தையும், ஆகாசம் சப்ததத்தையும், இந்தரன் தன் சக்தியையும், தர்ம

தேவதை தர்மத்தையும் விட்டாலும் விடட்டும். இந்த லோகங்களெல்லாம் ப்ரளயத்தில் அழியட்டும். நான் ஸத்யத்தை விடமாட்டேன்" னென்றார். அப்படியும் ஸத்யவதி ஸமாதானமடையாமல் "குழந்தாய்! உன் உறுதியையும் சக்தியையும் பராக்ரமத்தையும் நன்றாயறிவேன். ஆனால் நமது வம்சத்திற்கு இவ்விதமான ஆபத் நேரும் ஸமயத்தில் நீ க்ஷத்ரியர்களுடைய ஆபத் தர்மத்தை அனுஸரிப்பதில் பாபமில்லை. இது நமது முன்னோர்கள் அனுஷ்டித்த தர்மமே" யென்றாள். அதைக் கேட்டுப் பீஷ்மர், "தாயே! இப்படித் தர்மத்திலிருந்து விலகிப் பேசுவது தங்களுக்கழகல்ல. க்ஷத்ரியன் ஸத்யந்தவறினால் வம்சமே அழிந்துவிடும். தாங்கள் என்னைக் கட்டளையிட்ட படி சந்தனுவின் வம்சம் பூமியில் அழிந்து போகாமலிருப்பதற்கு உபாயமான புராதன க்ஷத்ரிய தர்மத்தைச் சொல்லுகிறேன். அதைக்கேட்டு ஞானவான்களோடும் புரோஹிதர்களோடும் மந்த்ரிகளோடும் நன்றாய் ஆலோசித்து அனுஷ்டிக்கவேண்டும்.

---

## புராதன தர்மம்

முன்காலத்தில் ஹைஹயதேசத்து அரசனான கார்த்தவீர்யார்ஜுனன் ஜமதக்னியென்ற மஹர்ஷியை க்ரூரமாய்க் கொன்றான். அதற்காக அவருடைய புத்ரரான பரசுராமர் அவனைத் தன் கோடாலியால் கொன்றார். பிறகு அவர் பூமியெங்கும் திரிந்து க்ஷத்ரியர்களை இருபத்தொருமுறை வேரறுத்தார். அப்பொழுது ஸகல தேசங்களிலுமுள்ள க்ஷத்ரிய ஸ்த்ரீகள் ஸந்ததியில்லாமல் அங்குள்ள ப்ராஹ்மணோத்தமர்களிடத்தில் புத்ரர்களைப் பெற்றுக் கொண்டார்கள். கன்யையைப் பாணிக்ரஹணம் செய்பவனுக்கே புத்ரனென்று வேதங்கள் சொல்லுகின்றன. அதற்கு

முன்பு ஸூர்யவம்சசந்தரசனை ஸௌதாஸனுக்கு ரிஷியின் சாபமேற்பட்டு அதனால் ஸந்ததியற்றுப்போன பிறகு அவனுடைய பார்யையான மதயந்தியினித்தில் வஸிஷ்ட மஹர்ஷி புத்ரனை உண்டுபண்ணினார். இது புராதனதர்மம்.

---

### தீர்க்கதமஸின் கதை

மேலும் உசத்யரென்ற ரிஷிச்ரேஷ்டருக்கு மமதை யென்ற பார்யை இருந்திருந்தாள். அவர்களுக்குத் தீர்க்கதமஸென்ற ஓர் புத்ரர் பிறந்தார். அவர் கர்ப்பத்திலேயே வேதவேதாங்கங்களையும் ஸகல ஞானத்தையும் அறிந்தவர்; ஆனால் ப்ருஹஸ்பதியின் சாபத்தால் குருடராய்ப் பிறந்தார். தன் குலம் விருத்தியாவதற்காக கௌதமர் முதலிய புத்ரர்களைப் பெற்றார் பிறகு அவருடைய பார்யையான ப்ரத்வேஷியென்பவள் அவரால் தனக்கு யாதொரு ப்ரயோஜனமில்லாததையும் புத்ரர்கள் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்கு ஏற்பட்டதையும் கண்டு அவரை அலக்ஷ்யஞ்செய்து தள்ளிவிட்டாள். அதனால் அவர் கோபித்து "இன்று முதல் லோகத்தில் நான் ஒரு ஏற்பாட்டைச் செய்யப்போகிறேன். ஒரு ஸ்த்ரீ ஒரு புருஷனையே விவாஹஞ் செய்துகொள்ளவேண்டியது. அவன் உயிரோடிருந்தாலும் இறந்தாலும் வேறொரு புருஷனை அடையக்கூடாது. அப்படிச் செய்தால் அவள் மஹாபாதகத்துக்கு ஆளாவாள். இதுமுதல் ஸ்த்ரீகள் புருஷனை விட்டுத் தனியேயிருந்தால் அவர்களுக்கு மற்ற ஸகல குணங்களும் லக்ஷணங்களும் ஐச்வர்யங்களும் இருந்தாலும் அவர்கள் மஹாபாபிகளே. அவர்களுக்கு ஸந்தானம் இல்லாமல் போகட்டும். அபகீர்த்தியும் தூஷணையும் எப்பொழுதும் அவர்களைப் பின்தொடரட்டு" மென்று சபித்தார். அதைக் கேட்டு அவருடைய

பார்யை மிகுந்த கோபங்கொண்டு "புத்ரர்களே! இந்தத் துஷ்ட ப்ராஹ்மணனைக் கால் கைகளைக் கீட்டிக் கங்கையில் தள்ளுங்க"ளென்றாள். அப்படியே அந்த மூடர்கள் அவரைக் கட்டி ஒரு ஓடத்தில் வைத்துக் கங்கையில் விட்டார்கள். தீர்க்கதமஸ் கங்காப்ரவாஹத்தோடு மிதந்துகொண்டு அநேக தேசங்களைத் தாண்டிப் போனார். போகும்பொழுது தான் கற்ற வேதங்களை ஓதிக்கொண்டே இருந்தார். அப்பொழுது அங்கதேசத்தரசனான பலி கங்கைக்கரைக்கு ஜலம் குடிக்க வந்து வேதகோஷத்தைக் கேட்டு அது வரும் வழியில் சென்று பார்க்கையில் ஓடத்தில் கட்டுப்பட்டுக் கிடந்த ரிஷியைக் கண்டான். தர்மாத்மாவும் மஹாவீரனுமான அவ்வரசன் ஓடத்தைக் கரைக்கு இழுத்துக்கொண்டு வந்து மஹர்ஷியின் கட்டுகளை அவிழ்த்து அவரை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து ஸகல உபசாரத்துடன் தன்ராஜதானிக்குக் கொண்டுபோனான். அவர் ச்ரமபரிஹாரஞ் செய்துகொண்டு சில தினங்களான பிறகு பலி அவரை நமஸ்கரித்து "ஸ்வாமி! எனக்கு ஸந்ததியில்லை. ராஜநீதியிலும் தர்மானுஷ்டானத்திலும் எல்லையற்ற கீர்த்திசாலிகளான புத்ரர்களை எனக்கு அனுக்ரஹிக்கவேண்டு"மென்று ப்ரார்த்தித்தான். அவர் அதற்கு ஸம்மதிக்க, ஸுதேஷ்ணையென்ற தன் பார்யையைப் பலிஅவரிடத்திற்கு அனுப்பினான். அவர் கிழவரென்றும் குருடரென்றும் அவள் அலக்ஷ்யஞ்செய்து தனக்குப் பதிலாய்த் தன் தாதியின் மகளை அனுப்பினாள். தர்மஸ்வரூபியான தீர்க்கதமஸ் அந்தச் சூத்ரஸ்த்ரீயிடத்தில் கக்ஷீவான் முதலிய பதினொரு புத்ரர்களை உண்டுபண்ணினார். அவர்கள் ப்ரஹ்மதேஜஸுள்ளவர்களாய் வேதாத்யயனஞ் செய்வதைக் கண்டு பலி ஸந்தோஷித்து "மஹர்ஷே! இவ்வளவு உத்தமகுணங்களுள்ள புத்ரர்களை எனக்கு அனுக்ர

ஹித்ததற்காக நான் தங்களுக்கு என்ன ப்ரத்யுபகாரம் செய்யப் போகிறேனோ" வென்றான். அதைக் கேட்டு அந்த ரிஷி புன்சிரிப்புடன் "பூபால! உன் பாரியை தெரியாத் தனத்தால் உன் ஆக்ஞையை நிறைவேற்றவில்லை. நான் கிழவனென்றும் குருடனென்றும் நினைத்து என்னிடத்தில் வெறுப்படைந்து தனக்குப் பதிலாய் தன் தாதியின் மகளான சூத்ரஸ்த்ரீயை என்னிடத்தில் அனுப்பினாள். அவளிடத்தில் பிறந்த இவர்கள் என் புத்ரர்களே அல்லாது உன் புத்ரர்களல்ல" வென்றார். பலி அந்த மஹர்ஷியை மன்னிப்புக் கேட்டுக்கொண்டு மறுபடியும் தன் பார்யையை அவரிடத்திற்கு அனுப்பினான். தீர்க்கதமஸ் அந்த ராஜஸ்த்ரீயைப் பார்த்துத் தொட்டு "உனக்கு ஸூர்யனைப்போன்ற தேஜஸுள்ள ஐந்து புத்ரர்கள் உண்டாவார்கள். அவர்களுக்கு அங்கன், வங்கன், களிங்கன், புண்ட்ரன், ஸும்ஹனென்று பெயரிடவேண்டும். அந்தப் பெயர்களையுடைய தேசங்கள் பிற்காலத்தில் ஏற்படு"மென்றார். இப்படிப் பலியினுடைய வம்சம் தீர்க்கதமஸென்ற மஹர்ஷியால் உண்டாயிற்று. ஆகையால் விசித்ரவீர்யனுடைய பார்யையிடத்தில் புத்ரர்களை உண்டாக்குவதற்காக உத்தம குணங்கள் பொருந்தின ஓர் ப்ராஹ்மணரைத் தனத்தைக் கொடுத்தாவது ப்ரார்த்திக்கவேண்டும்" என்று பீஷ்மர் சொன்னதைக் கேட்டு, ஸத்யவதி எவ்வளவு பீஷ்மரைப் போதித்தும் தன் இஷ்டப்படி செய்யும்படி ப்ரார்த்தித்தும் அவர் இணங்கவில்லை. அப்பொழுது அவள் வெட்கத்தால் தலை குனிந்து தழதழத்த குரலுடன் பீஷ்மரைப் பார்த்து "நமது வம்சம் லோகத்தில் அழியாமலிருக்கும்படி இப்பொழுது எதாவது உபாயம் செய்யவேண்டியிருப்பதால் உன்னிடத்தில் ஓர் ரஹஸ்யத்தை வெளியிடப்போகிறேன். இப்படிப்

பட்ட ஆபத்காலத்தில் அனுஷ்டிக்கவேண்டிய தர்மத்தை நான் உனக்குச் சொல்லாமலிருக்கமுடியாது. இந்த ரஹஸ்யத்தை நீ எக்காலத்திலும் வெளியிடக்கூடாது.

---

## ஸத்யவதீயின் பூர்வசரித்ரம்.

முன் காலத்தில் வஸுவென்று ஓர் அரசனிருந்தார். அவருடைய வீர்யத்தால் ஒரு மீன் கர்ப்பந்தரித்து என்னைப் பெற்றது. பிறகு ஓர் தர்மவானான செம்படவன் அந்த மீனை ஜலத்திலிருந்து எடுத்து என்னைத் தன் வீட்டிற்குக் கொண்டுபோய்த் தன் பெண்ணாய் வளர்த்து வந்தான். எனக்கு யௌவனம் வந்தபொழுது தர்மத்திற்காக நதியில் ஓடம் விடக் கற்றுக்கொண்டேன். ஸாதுக்களும் ரிஷிகளும் உத்தம ப்ராஹ்மணர்களும் அந்த வழியாய் வரும்போது அவர்களை ஓடத்தில் ஏற்றி நதியைத் தாண்டி அக்கரையில் சேர்ப்பதால் புண்யத்தை ஸம்பாதித்துக்கொண்டிருந்தேன். ஒருநாள் பராசரரென்ற மஹர்ஷி யமுனையைத் தாண்டுவதற்காக அங்கே வந்தார். அவர் ஓடத்திலேறி பாதி தூரம் போனபொழுது என்னைப் பார்த்துப் "பெண்ணே! நீ சூத்ரஸ்த்ரீயென்றும் செம்படவனுடைய மகளென்றும் எண்ணிக்கொண்டிருக்கிறாய். ஆனால் நீ உத்தமமான ராஜகுலத்தில் பிறந்தவள். உபரிச்ரவஸென்ற வஸுவின் பெண்"ணென்று என் பிறப்பின் வரலாற்றை விஸ்தாரமாய் எடுத்துச் சொல்லி, "இன்னும் சற்று நேரத்திற்குள் உதயமாகும் லக்னத்தில் பிறக்கும் புருஷன் ஈச்வரனுடைய அம்சமுள்ளவனும் மஹாஞானியும் யோகியும் லோகத்தில் வேத சாஸ்த்ரங்களை ஸ்தாபிப்பவனும் ரிஷிகளுக்குக் குருவுமாவான். அவ்விதமான

புத்ரனை இந்த லக்னத்தில் உண்டாக்க உத்தேசித்திருக்கிறேன். பூர்வ ஜன்மங்களில் செய்த கர்மத்தின் மஹிமையால் அப்படிப்பட்ட புத்ரனுக்கு நான் பிதாவாயும் நீ மாதாவாயுமிருக்கும்படி ஏற்பட்டிருக்கிறது; ஆகையால் இந்த லோகோபகாரமான கார்யத்தை நாமிருவரும் செய்யவேண்டியது. அதற்கு நீ ஸம்மதித்தால் உனக்கு என்றுமழியாத கீர்த்தியும் புண்யமும் கிடைக்கும். உனக்கு அபூர்வமான வரங்களைக் கொடுக்கிறேன். உன் தேஹத்திலுள்ள மீன் நாற்றம் பிறர் வெறுக்கும்படி வெகு தூரம் வீசுகிறது. நான் உன்னைத் தொட்டவுடன் அது நீங்கி ஒரு யோஜனை தூரம் இனிய மணம் வீசும். உனக்கு மத்ஸ்யகந்தியென்ற பெயர் நீங்கி யோஜனகந்தியென்ற பெயர் கிடைக்கும். மேலும் அந்தப் புத்ரனை என்னிடத்தில் நீ பெற்ற பிறகு மறுபடியும் நீ கன்யையாவாய். பிறகு விவாஹஞ்செய்து கொள்வதற்கு யாதொரு தடையும் ஏற்படாது. இப்படிச் செய்வதில் உன்னைப் பெண்ணாய் வளர்த்துவந்த செம்படவனுக்கும் ஆக்ஷேபமிராது. இப்படிச் செய்ய நீ ஆக்ஷேபித்தால் நான் உன்னைக் கோரமாய்ச் சபிப்பேன். காலதாமஸம் செய்யாதே" யென்றார். நான் அவருடைய சாபத்திற்குப் பயந்தும் என் பிதாவின் கோபத்திற்குப் பயந்தும் அந்த மஹா கார்யத்தைச் செய்வதால் லோகத்திற்குண்டாகும் பெரிய லாபத்தைக் கெடுக்க இஷ்டமில்லாமலும் அவருடைய ஆக்ஞைக்கு ஸந்தோஷமாய்க் கட்டுப்பட்டேன். ஆனால் அப்பொழுது யமுனையின் இருகரையிலும் ரிஷிகணங்களும் மனுஷ்யர்களும் நிறைந்திருந்தாலும் ஸூர்யன் ப்ரகாசித்துக்கொண்டிருந்ததாலும் வெட்கமடைந்து அதற்கு ஏதாவது பரிஹாரம் செய்ய நினைத்துப் ப்ரார்த்திததேன். உடனே அவர் தன் யோகமஹிமையால்

நதியின் நடுவில் ஓர் திட்டை உண்டுபண்ணி நான்கு புறத்திலும் மூடுபனியால் மறைத்தார். பிறகு அவர் என்னிடத்தில் ஓர் புத்ரனை உண்டுபண்ணி எனக்கு மறுபடியும் கன்யைப் பருவத்தைக் கொடுத்தார். அப்பொழுது பிறந்த புத்ரன் மஹா யோகசக்தியுள்ள மஹர்ஷியானான். த்வீபத்தில் பிறந்ததால் த்வைபாயனனென்றும், வேதங்களைத் தபஸால் அறிந்து நான்காய் வகுத்ததால் வ்யாஸனென்றும் கறுத்த நிறத்தால் கிருஷ்ணனென்றும் பெயரடைந்தான். பிதாவிற்கு ஸகல விதத்திலும் ஸமமான ஞானமும் சக்தியுமுள்ள அந்த ரிஷிகுமாரன் என்னைப் பார்த்துத் "தாயே! நான் தபஸ் செய்யப் போகிறேன். உனக்கு ஏதாவது ஆபத் நேர்ந்தால் என்னை நினை. நான் உடனே தவருமல் வந்து தோன்றி ஆக்ஞையை நிறைவேற்றுகிறே"னென்று உறுதி சொல்லிவிட்டுத் தன் பிதாவுடன் தபஸ் செய்யப் போய் விட்டான். இந்த ஸமயத்தில் நீயும் என்னைக் கைவிட்டாய். லோகத்தில் நமது ஸந்ததி விருத்தியாவதற்கு வேறொரு வழியுமில்லை. ஆகையால் என் புத்ரனான வ்யாஸனை வருவித்துத் தன் ஸஹோதரனுடைய பார்யைகளிடத்தில் புத்ரர்களை உண்டுபண்ணச் சொல்லுகிறேன். இது உனக்கு ந்யாயமாகத் தோன்றுகிறதா? நீயே தர்ம ஸ்வரூபி; நீயே ஸத்யம்; நீயே ஞானம்; ஸகல சக்திகளும் நீயே; ஆகையால் நன்றாய் ஆலோசித்து எது செய்யவேண்டுமோ அதைச் சொல்''லென்றாள்.

அதைக் கேட்டுப் பீஷ்மர் கைகளைத் தலைமேல் கூப்பி வியாஸருடைய பெயரைக் கேட்டவுடன் நமஸ்கரித்துத், "தாயே! இந்தப் பெரிய கார்யம் நிறைவேறுவதற்காகத் தாங்கள் சொன்ன உபாயம் தர்மத்திற்கு ஒத்ததாயும் பெரியோர்களால் அனுஷ்டிக்கப்பட்டதாயும் ஸகல ஜனங்களா

லும் கொண்டாடப்பட்டதாயுமிருக்கிறது. இப்படிப்பட்ட ஓர் ஸாதனம் தங்களுடைய வசத்திலிருக்கும்பொழுது ஏன் வீணாய் இதுவரையில் கவலைப்படவேண்டும்? ஸகல விதத்தாலும் தாங்கள் சொன்ன ஏற்பாடு எனக்கு உத்தம மாய்த் தோன்றுகிறது. காலதாமஸமில்லாமல் அதை முடிக்கலா"மென்றார்.

---

### வ்யாஸர் புத்ரர்களை உண்டுபண்ணினது

உடனே ஸத்யவதியென்ற உத்தமி தன் புத்ரனான கிருஷ்ணத் வைபாயனரை மனஸால் அழைத்தாள். அதை அறிந்து அந்த மஹர்ஷி க்ஷணநேரத்திற்குள் யார்க்கும் தெரியாமல் அவளுக்கெதிரே தோன்றி ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துக் கைகூப்பித் "தாயே! என்னை நினைத்த காரண மென்ன? தங்களுடைய ஆக்ஞையைச் சிரஸால் வஹித் துக் கூடியவரையில் நிறைவேற்றக் காத்துக்கொண்டி ருக்கிறே"னென்றார். பஹுகாலமாய்த் தான் பாராதிரு ந்த புத்ரனைக் கண்ட ஸத்யவதி அவன் மஹர்ஷியென் பதையும் மஹாத்மாவென்பதையும் மறந்து, தனக்கு முதல் முதல் பிறந்த குழந்தையென்ற எண்ணமே மேலிட்டு, அவரை வாரியணைத்து உச்சி முகந்து கண்களில் நீர் பெருக தழதழத்த குரலுடன் அவரை ஆசீர்வதித்து க்ஷேமம் விசாரித்தாள். வ்யாஸர் அதற்குத் தகுந்த பதில் சொல்லித் தன் தாயின் உத்திரவால் ஆஸனத்திலிருந்து ராஜபுரோஹி தரால் ஸகல பூஜைகளையும் உபசாரங்களையும் செய்யப் பெற்று, ஸந்தோஷமடைந்தார். பிறகு ஸத்யவதி அவரை நோக்கிக் "குழந்தாய்! உன் பிதாவான பராசர மஹர்ஷிக்கு உன்னிடத்தில் எவ்வளவு ஸ்வாதீனமுண்டோ அவ்வளவு எனக்கும் உண்டென்று நினைக்கிறேன். நன்றாய் ஆலோ

சித்தால் தாய்க்குப் புத்ரனிடத்திலிருக்கும் ப்ரீதிக்கு ஈடில்லை. ஆகையால் அவருடைய வார்த்தையை நிறை வேற்றுவது எப்படி உனக்குத் தர்மமோ அப்படியே என் வார்த்தையையும் நிறைவேற்ற வேண்டியது. நீ எனக்கு மூத்த புத்ரன். அப்படியே விசித்ரவீர்யன் என் கனிஷ்ட புத்ரன். பிதாவின் வழியாய் பீஷ்மன் அவனுக்கு எப்படி ஸஹோதரனோ அப்படியே தாயின் வழியாய் நீயும் ஸஹோ தரன். நிகரற்ற கீர்த்தியுள்ள சந்தனு சக்ரவர்த்திக்குப் பிறந்த புத்ரர்களில் மூத்தவனான இந்தப் பீஷ்மன் என்னைத் தன் பிதாவிற்குப் பார்யையாக வரிப்பதற்காக தனக்கு ந்யாய மாய்க் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை எனக்குப் பிறக்கும் புத்ரர்களுக்குக் கொடுத்து அதற்கு எக்காலத்திலும் யாதொரு இடையூறும் நேராதபடி தான் எந்நாளும் விவா ஹம் செய்துகொள்வதில்லையென்றும் நித்ய ப்ரஹ்மசாரி யாயிருப்பேனென்றும், ஸகல பூதங்களின் முன்னிலை யில் கோரமான ப்ரதிக்ஞை செய்திருக்கிறான். நான் எவ் வளவு ப்ரார்த்தித்தும் அதை இந்த ஆபத்காலத்திலும் தவறவில்லை. ஆகையால் என் வம்சவிருத்திக்காகவும் உன் ஸஹோதரனுக்கு உத்தம கதி கிடைக்கவேண்டியதற் காகவும் நானும் பீஷ்மனும் கேட்டுக்கொள்வதற்காகவும் நீ உன் ஸஹோதரனுடைய பார்யைகளிடத்தில நமது வம்சத் திற்குத் தகுந்த புத்ரர்களை உண்டுபண்ணக்கடவாயென் றாள்.

அப்பொழுது வ்யாஸர் "தாயே! தங்களுக்குத் தெரி யாத தர்மமில்லை; நான் தங்களுடைய கட்டளைப்படி குரு வம்சம் எந்நாளும் நிலைத்திருக்கும் உபாயத்தைச் செய்கி றேன். என் ஸஹோதரனுடைய இரண்டு பார்யைகளும் ஒரு வர்ஷம் வரையில் நான் சொல்லும் வ்ரதத்தை அனுஷ்

டித்துப் பரிசுத்தமடைந்தபிறகு அவர்களிடத்தில் ஸூர்யனுக்கும் வருணனுக்கும் ஸமமான புத்ரர்களை உண்டாக்குகிறே"னென்றார். அதற்கு ஸத்யவதி "அரசனில்லாத இந்த ராஜ்யத்தில் ப்ரஜைகள் ரக்ஷிப்பவர்களில்லாமல் தர்மானுஷ்டானத்திலிருந்து தவறுகிறார்கள்; சத்ருக்களால் அழிக்கப்படுகிறார்கள்; மழை காலத்தில் பெய்யவில்லை; தேவதைகள் மனுஷ்யர்களோடு கலந்து அவர்களுக்கு அனுக்ரஹஞ்செய்யவில்லை. பீஷ்மன் ராஜ்யகார்யங்களில் ப்ரவேசிக்க முடியாது. ஆகையால் ராஜஸ்த்ரீகள் உடனே புத்ரர்களை அடையும்படி செய். அந்தக் கர்ப்பத்தைப் பீஷ்மன் வளர்ப்பா"னென்றாள். அதற்கு வ்யாஸர் "எந்த ஸ்த்ரீயும் வ்ரதத்தால் சுத்தியடையாமல் என்னிடத்தில் புத்ரர்களைப் பெறமுடியாது. அக்காலத்தில் நான் புத்ரனைக் கொடுக்கவேண்டுமானால் என்னுடைய நிறத்தையும் வேஷத்தையும் சரீரத்தையும் விகார ரூபத்தையும் அருவருப்பான பார்வையையும் இந்த ராஜஸ்த்ரீகள் ஸஹிப்பதே அவர்களுக்குக் கடினமான வ்ரதமாகும். அப்படி என்னால் உண்டாக்கப்படும் புத்ரனுக்கு நூறு புத்ரர்கள் பிறப்பார்க"ளென்றார்.

பிறகு ஸத்யவதி தன் மருமகளான அம்பிகையைத் தனியாய் அழைத்துக் குருவம்சத்திற்கு நேர்ந்த ஆபத்தையும் அரசனில்லாததால் ராஜ்யத்தில் பரவும் கெடுதியையும் விஸ்தாரமாய் எடுத்துச் சொல்லி, உத்தமமான புத்ரர்களைப் பெறுவதற்குத் தானும் பீஷ்மரும் வ்யாஸரும் ஆலோசித்துச் செய்த உபாயத்தையும் தெரிவித்து, அதற்கு ஸம்மதிக்கும்படி கேட்டுக்கொண்டாள். கௌஸல்யையென்று பெயரையுடைய அம்பிகை அதைக் கேட்டு ஸந்தோஷமில்லாதவளாய் அரைமனஸுடன்

ஸம்மதித்தாள். தன் மருமகள்ஒருவர்ஷம் வ்ருதானுஷ்டானம் செய்து பிறகு சுத்தமாயிருக்கும்பொழுது ருதுகாலத்தில் ருதுஸ்நாநஞ்செய்த அவளை ஸத்யவதி நேர்த்தியான வஸ்த்ராங்களாலும் ஆபரணங்களாலும் பரிமளமான கந்தங்களாலும் அலங்கரித்துப் படுக்கையறையில் வைத்து, "கௌஸல்யே! உன் மைத்துனனை வ்யாஸமஹர்ஷி இன்று பாதிராத்ரியில் இங்கே வந்து நமது வம்சத்தை விளங்கச்செய்யும் உத்தம புத்ரர்களை உனக்கு அனுக்ரஹிப்பார். சுத்தமான மனதோடும் அவரிடத்தில் எல்லையற்ற பக்தியோடும் இருந்து என் எண்ணத்தை நிறைவேற்றக் கடவாயெ"ன்று எச்சரித்துப் போனாள். பிறகு அந்த நகரத்தில் ஜனங்கள் அயர்ந்து தூங்கும் வேளையில் பாதிராத்ரியில் வ்யாஸபகவான் அந்த அரண்மனையில் ப்ரவேசித்து அம்பிகை இருக்கும் அறைக்குப் போனார். ஒருநாளும் அப்படிப்பட்ட மனுஷ்யனை அவள் பார்த்ததேயில்லை. அவர் தபஸால் மெலிந்து இளைத்துக்கறுத்து,ஜடைதாடி மீசையுடன் தேஹமெங்கும் எலும்புகள் வெளிப்பட்டு அழுக்கடைந்து துர்க்கந்தம் வீசும்படி, செம்பட்டை வர்ணமுள்ள மயிருடனும் ஜ்வலிக்கின்ற கண்களுடன் தன் அறையில் ப்ரவேசித்த அந்த மஹரிஷியைக் கண்டு பயந்து வெட்கமடைந்து கண்களை மூடிக்கொண்டாள். வ்யாஸர் இதுவும் கர்மகதியென்று நினைத்து அவளிடத்தில் ஒரு புத்ரனை அனுக்ரஹித்தார். அங்கிருந்து வெளியில் வந்தவுடன் ஸத்யவதி "குழந்தாய்! இவளுக்கு ராஜலக்ஷணங்களும் உத்தம குணங்களும் பொருந்தின புத்ரன் பிறப்பானோ" வென்றாள். மூன்று காலங்களையும் அறிந்த வ்யாஸர் "அம்மா! பதினாயிரம் யானைகளின் பலமுள்ளவனும் புத்தியிலும் பராக்ரமத்திலும் பாக்யத்திலும். நிகரற்றவனுமான ஒரு

ராஜர்ஷி பிறப்பான். அவனுக்கு நூறு புத்ரர்கள் உண்டா வார்கள். ஆனால் இந்த ராஜகன்யை என்னைக் கண்டவுடன் பயத்தாலும் கூச்சத்தாலும் அருவருப்பாலும் கண்களை மூடிக்கொண்டபடியால் அவன் பிறவிக் குருடனாயிருப்பா" னென்றார். அதைக் கேட்டு ஸத்யவதி திடுக்கிட்டு மனம் நொந்து "ஐயோ! குருவம்சத்திற்கு இவ்வளவு கஷ்டப் பட்டு ஸம்பாதித்த அரசன் குருடனாயிருக்கவேண்டுமோ! தன் ப்ரஜைகளை ரக்ஷிப்பதற்கும் சத்ருக்களை நாசஞ்செய் வதற்கும் பந்துக்களையும் மித்ரர்களையும் ஆதரவுடன் பரி பாலிப்பதற்கும் தகுந்த வேறொரு புத்ரனை அம்பாலிகை யென்ற என் இரண்டாவது மருமகளிடத்தில் உண்டாக்க வேண்டு"மென்று வேண்டினாள். 'அப்படியே செய்கிறே' னென்று சொல்லிவிட்டு வ்யாஸர் போய்விட்டார். காலக்ர மத்தில் அம்பிகை கர்ப்பந்தரித்து ஓர் புத்ரனைப் பெற்றாள். அவன் குருடனென்ற ஓர் குறையைத் தவிர மற்ற எவ் விதத்திலும் மேலானவனாயிருந்தான்

சில காலங்கழித்து அம்பாலிகை ருதுஸ்நாநஞ்செய்து சுத்தமாயிருக்கும் நாளில் ஸத்யவதி வ்யாஸரைத் தருவித்து அந்த ராஜ கன்யையிடத்தில் ஓர் புத்ரனை உண்டாக்கும்படி கேட்டுக்கொண்டாள். அவர் அதற்கு இணங்கி, அம்பாலிகை இருக்கும் படுக்கையறையில் வந்தவுடன், அவ்விதமான ரூபத்தையும் நிறத்தையும் வாஸனையையும் ஒரு நாளும் பார்த்தறியாத அந்தக் காசிராஜனுடைய புத்ரி பயந்து நடுங்கி னாள். தேஹம் வெளுத்தது; வ்யாஸர் தன் தாயின் கட்டளை யை நிறைவேற்றி அம்பாலிகையைப் பார்த்துப் "பெண்ணே! என் விகார ரூபத்தைக் கண்டு நீ பயந்து வெண்ணிறத்தை அடைந்ததால் உனக்குப் பிறக்கும் புத்ரன் அந்நிறமுள்ளவ னாவான். அதனால் அவனுக்குப் பாண்டு (வெண்மை) யென்ற

பெயர் வாய்க்கு"மென்றார். அந்த ரிஷி வெளியில் வந்தவுடன் ஸத்யவதி அவரை அழைத்துப் "புத்ர! இவ்விடத்திலாவது நான் விரும்பும் குணங்களுள்ள ராஜகுமாரன் பிறப்பானோ?" வென்றாள். அதற்கு வ்யாஸர் நடந்த விஷயங்களைச் சொல்லி "அம்மா! அந்தக் குழந்தை வெண்மையான நிறத்துடன் விளங்குவான். அதைத் தவிர சக்தியிலும் வீர்யத்திலும் ராஜநீதியிலும் ஒப்பற்றவனாவான். அவனுக்கு ஐந்து புத்ரர்கள் பிறப்பார்க"ளென்றார். அதைக் கேட்டு ஸத்யவதி 'கர்மகதி இப்படியிருக்க நாம் என்ன செய்ய முடியும்? இரண்டு தடவை ப்ரயத்னஞ்செய்தும் நமது வம்சத்தை விருத்தி செய்வதற்கும் ராஜ்யத்தை ஆளுவதற்குந் தகுந்த புத்ரர்கள் கிடைக்கவில்லையே. ஆனாலும் இன்னுமொரு தடவை ப்ரயத்னஞ்செய்வோ'மென்று வ்யாஸரை வேண்டிக்கொண்டாள். அவரும் 'அப்படியே செய்கிறே'னென்று ஸம்மதித்துப் போய் விட்டார். பிறகு அம்பாலிகை கர்ப்பந்தரித்து நல்ல முஹூர்த்தத்தில் ஓர் புத்ரனைப் பெற்றாள். பீஷ்மர் அந்தக் குழந்தைகளைத் தன் புத்ரர்களைப்போல் பாவித்து, வேத வேதாங்கங்களில் கரை கண்ட ப்ராஹ்மணர்களால் ஜாதகர்மம் நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்வித்தார்.

பிறகு ஸத்யவதி வ்யாஸரை வருவித்து "அம்பிகையிடத்தில் பிறந்த புத்ரன் பிறவிக்குருடனானான். அம்பாலிகையிடத்தில் பிறந்த புத்ரனோ வெண்ணிற முள்ளவனானான். இப்பொழுதாவது யாதொரு குறையில்லாமல் என்னெண்ணப்படி இருக்கும் புத்ரனை உண்டுபண்ணக்கடவா"யென்றாள். அதற்கு வ்யாஸர் "கௌஸல்யையென்ற அம்பிகை ஸரியான மனஸோடும் ஜாக்ரதையோடும் இருந்தால் தர்மிஷ்டனும் ராஜ நீதியிலும் அஸ்த்ரவித்யையிலும் சிறந்தவனுமான ஓர்

குமாரனை அவளுக்குக் கொடுக்கிறேன்”னென்றார். ஸத்யவதி அம்பிகையை அழைத்து, முன்பு தவறி நடந்தபடி மறுபடியும் நடக்காமல் பல விதமாய்ப் போதித்துத் தைர்யப்படுத்தி ருதுகாலத்தில் நல்ல முஹூர்த்தத்தில் வ்யாஸரை அழைப்பித்து அவரிடத்திற்கு அந்த ராஜகன்யையை அனுப்பினாள். ஆனால் அம்பிகை அந்த மஹர்ஷியின் அருவருப்பான ரூபத்தையும் நிறத்தையும் நாற்றத்தையும் ஞாபகப்படுத்திக்கொண்டு பயத்தாலும் வெறுப்பாலும் ஸத்யவதி சொன்னபடி செய்யவில்லை. தனக்குப் பதிலாய்த் தன் ஆபரணங்களால் ஒரு வேலைக்காரியை அலங்கரித்து வ்யாஸரிடத்தில் அனுப்பினாள். அவள் மேன்மையான குணமுள்ளவளாகையால் அந்த ரிஷியைப் பக்தியுடன் எதிர்கொண்டழைத்து நமஸ்கரித்து அவருடைய ஆக்ஞைப்படி நடந்துகொண்டாள். பிறகு அவர் அவளைப் பார்த்து “உனக்கு இந்த க்ஷணம் முதல் அடிமைத்தனம் நீங்கிற்று. உனக்குப் பிறக்கும் புத்ரன் தர்மாத்மாவாயும் ஞானியாயும் நீதிசாஸ்த்ரங்களின் ரஹஸ்யங்களை அறிந்தவனாயுமிருப்பா”னென்றார். பிறகு ஸத்யவதியைக் கண்டு அதைத் தெரிவித்து “தர்மதேவதையான யமனே ஆணிமாண்டவ்ய ரிஷியின் சாபத்தால் இந்த சூத்ரஸ்த்ரீக்குப் புத்ரனாய்ப் பிறந்தா”னென்று சொல்லிவிட்டு அவ்விடத்திலேயே மறைந்தார். காலக்ரமத்தில் அந்த வேலைக்காரி கர்ப்பந்தரித்து மஹாத்மாவான விதுரரைப்பெற்றாள்.

---

### கௌரவபுத்ரர்கள்

அந்தப் புத்ரர்களுடைய பால்யத்தில் பீஷ்மர் ஸகல ராஜ்யகார்யங்களையும் தானே பார்த்துவந்தார். தனத்திலும் தான்யத்திலும் ஆரோக்யத்திலும் ஐச்வர்யத்திலும்

கீர்த்தியிலும்அந்த ராஜ்யம் நிகரில்லாமல் விளங்கிற்று. பீஷ்மர் அந்த ராஜகுமாரர்களை வேதாத்யயனம் சாஸ்த்ராப்யாஸம்சரீரப்பயிற்சி யுத்தப்பயிற்சி நீதிசாஸ்த்ரம் இதிஹாஸ புராணங்கள் கலைகள் வித்யைகள் முதலியவைகளில் ப்ரஸித்திபெற்ற உபாத்யாயர்களைக் கொண்டு வெகு ஜாக்ரதையாய்க் கற்பித்தார். பிறகு தகுந்த காலத்தில் திருதராஷ்ட்ரனை ராஜாவாய்ப் பட்டாபிஷேகஞ்செய்தார். பாண்டுவை அவனுக்கு ஸேனாபதியாயும் விதுரரை முக்யமந்த்ரியாயும் நியமித்தார். சில காலங்கழித்து பீஷ்மர் விதுரருடன் ஆலோசித்துப் பல தேசங்களுக்குத் தூதர்களை அனுப்பி விசாரித்து, முடிவில் காந்தாரதேசத்து அரசனான ஸுபலனுடையபுத்ரியான காந்தாரியைத் திருதராஷ்ட்ரனுக்கு விவாஹம் செய்வித்தார். மஹா பதிவ்ரதையான அந்தப் பெண் தன் பர்த்தாவிற்குக் கண்ணில்லையென்று கேள்விப்பட்டு அந்த க்ஷணம் முதல் ஒரு வஸ்த்ரத்தால் தன் கண்களை இரண்டையும் கட்டிக்கொண்டாள். பீஷ்மர் அவளுடைய ஸஹோதரிகளான பத்து ராஜ கன்யைகளை திருதராஷ்ட்ரனுக்கே விவாஹஞ்செய்வித்தார். சில காலங்கழித்துப் பீஷ்மர் அநேக தேசங்களிலிருந்து நூறு ராஜகுமாரிகளைத் தருவித்துத் திருதராஷ்ட்ரனுக்குப் பார்யைகளாகக் கொடுத்தார். பிறகு பாண்டு வென்ற ராஜ குமாரனுக்கு சூரஸேனனென்ற யாதவச்ரேஷ்டனுடைய பெண்ணான குந்தியையும் பிறகு மத்ரதேசத்தரசனுடைய புத்ரியான மாத்ரியையும் விவாஹஞ்செய்தார். குந்திக்கு விவாஹஞ்செய்வதற்கு முன்னாலேயே துர்வாஸ மஹர்ஷியினுடைய அனுக்ரஹத்தால் பெற்ற சில மந்த்ரங்களில் ஸூர்யதேவதையை அழைக்கும் மந்த்ரத்தின் பலத்தால் ஸூர்யன் அவளிடத்தில் கர்ணனென்ற புத்ரனை உண்

டாக்கினன். பிறகு பாண்டு வனத்தில் வேட்டையாடிக் கொண்டிருக்கையில் ஓர் ரிஷியின் சாபத்தைப் பெற்று, அத ஞல் தன் பார்யைகளிடத்தில் ஸந்ததியை உண்டாக்க முடி யாதவனுனன். ஆகையால் குந்தி, தர்மதேவதை வாயு இந்த் ரன் இம்மூவரையும், பாண்டு கேட்டுக்கொண்டதால் வருவித்து, அவர்களால் யுதிஷ்டிரர், பீமஸேனன், அர்ஜுன னென்று பெயருடைய புத்ரர்களைப் பெற்ருள். மாத்ரீயென் பவள் அச்வினி தேவதைகளால் நகுலன் ஸஹதேவனென்று இரண்டு புத்ரர்களைப் பெற்ருள். பிறகு துர்யோதனன் முதலிய நூறு புத்ரர்களையும் துச்சலையென்ற பெண்ணை யும் காந்தாரி பெற்ருள். பாண்டுபுத்ரர்கள் பால்யம்முதல் அஸ்த்ரசஸ்த்ர வித்யைகளில் நிகரற்ற திறமையுள்ளவர் களாயும் நன்னடத்தையுள்ளவர்களாயும் குருபக்தி தைவ பக்தி யுள்ளவர்களாயு மிருந்தார்கள். ஆனல் திருதராஷ்ட்ர னுடைய புத்ரர்கள் ஆரம்பம்முதல் பாண்டு புத்ரர்களிடத் தில் வரவர விருத்தியாகும் த்வேஷத்தையும் அஸூயை யையும் பொருமையும் கொண்டு க்ரூரமான நடத்தையும் துஷ்டர்களுடைய ஸஹவாஸத்தையும் கைக்கொண்டு பல தடவைகளில் பாண்டுபுத்ரர்களைக் கொல்ல உபாயம் செய் தார்கள். ஆனல் பாண்டவர்களுக்குப் பந்துவும் பரமமித்ர னுமான கிருஷ்ண பரமாத்மாவின் அனுக்ரஹத்தாலும் பீஷ்மர் முதலிய பெரியோர்களின் ஆசீர்வாதத்தாலும் அந்த ஆபத்துகளிலிருந்து பாண்டவர்கள் தப்பினர்கள். பீஷ்மர் ஒவ்வொரு ஸமயத்திலும் துர்யோதனன் முதலியவர்களைத் தன்னல் கூடியவரையில் நல்லபுத்தி சொல்லியும் பாண்ட வர்களுடன் கலந்து ஸ்நேஹத்துடனிருக்கும்படி போதித் தும் கொஞ்சங்கூட ப்ரயோஜனப்படவில்லை. பிறகு பாண்ட வர்களுக்குப் பாதி ராஜ்யம் கொடுக்கும்படி பீஷ்மர் த்ரோ

ணர் விதுரர் முதலிய பெரியோர்கள் திருதராஷ்ட்ரனுக்கு எடுத்துச் சொல்ல அவன் அப்படியே செய்தான்.

---

### பீஷ்மர் பரசுராமருடன் யுத்தஞ் செய்தது

முன்பு அம்பை பீஷ்மராலும் சால்வனாலும் விலக்கப் பட்டு, வேறுகதியில்லாமல் மஹாதேவரிடத்திலிருந்து அபூர் வமான சக்தியுள்ள ஓர் மாலையைப் பெற்று அதைப் பீஷ்ம ருடைய மரணத்திற்குக் காரணமாய் த்ருபதராஜனுடைய அரண்மனைவாயிலில் மாட்டிவிட்டுப்போனாள். அதைச் சிகண்டினியென்ற பெண் தரித்துக்கொண்டாள். பிறகு அம்பை பீஷ்மருடன் சண்டை செய்யக்கூடியவனை லோக மெங்கும் தேடியும் ஒருவரும் கிடைக்கவில்லை. அவள் வனங்களில் சென்று அங்கிருக்கும் தபஸ்விகளையும் ரிஷிகளை யும் ப்ரார்த்தித்தாள். அவர்களும் அவளுக்கு ஒத்தாசைசெய் யத் துணியவில்லை. இப்படிச் சால்வனிடத்திலும் பீஷ்ம ரிடத்திலும் தன் பெற்றோர்களிடத்திலும் போகமுடியாமல் காட்டில் திரிந்துகொண்டிருக்கையில் ஹோத்ரவாஹன னென்ற ராஜர்ஷி அங்கே வந்தார். அவர் அம்பையின் தாய்க் குப் பிதா. அவள் படும் துக்கத்தைக் கண்டு மிகுந்த வருத்தம டைந்து, "குழந்தாய்! உன் துக்கம் நீங்குவதற்கு ஒரு உபாயம் சொல்லுகிறேன். ஜமதக்னியின் புத்ரனான பரசுராமன் எனக்கு ப்ரியமித்ரன். அவர் இங்கே ஸமீபத்தில் வருவார். நான் அவரிடத்தில் உன்னை ஒப்புவிக்கிறேன். பீஷ்மன் அவ ரிடத்தில் அஸ்த்ராப்யாஸம் செய்ததால் அவருடைய சிஷ் யனாகிறான். ஆகையால் அவருடைய ஆக்ஞையைத் தவற மாட்டான். உன்னை நிச்சயமாய் மறுபடியும் ஒப்புக்கொள் வான். அல்லது உன்னைச் சால்வன் ஒப்புக்கொள்ள வேண்டு மென்றாலும் அப்படியே அவனைப் பரசுராமன் கட்டளை

யிடுவார். அல்லது இவர்கள் ஸம்மதிக்காவிட்டால் யுத்தத்தில் இவர்களை ஜயித்து ஸம்மதிக்கச்செய்வார். அல்லது அவர்களை நாசஞ்செய்வா”ரென்ருர்.

அப்படியே மறுநாள் பரசுராமன் அங்கே வந்தார். அப்பொழுது ஹோத்ரவஹானன் அவரிடத்தில் அம்பையை அழைத்துப்போய் நடந்த விருத்தாந்தங்களை விஸ்தாரமாய்ச் சொல்லி, அவளுடைய விருப்பத்தை நிறைவேற்றும்படி ப்ரார்த்தித்தார். அதற்குப் பரசுராமன் ஸம்மதித்து அம்பையை அழைத்துக்கொண்டு ரிஷிகணங்களுடன் பீஷ்மரிடத்திற்கு வந்தார். அவரால் ஸகல உபசாரங்களையும் பெற்று ஸந்தோஷமடைந்து ஆஸனத்திலிருந்து பீஷ்மரைப் பார்த்துக் “குழந்தாய்! இந்த அம்பையென்ற காசிராஜனுடைய புத்ரி உன்னுல் ஸ்வயம் வரத்தில் ஜயிக்கப்பட்டு ஹஸ்தினபுரத்திற்குக் கொண்டு வரப்பட்டாள். அவள் சால்வனை விவாஹஞ்செய்வதாய் உத்தேசித்திருந்ததை நீ அறிந்து அவளை அவனிடத்திற்கு அனுப்பினுய். அவள் உன்னுல் வசப்படுத்தப்பட்டாளென்பதைக் காரணமாகக் கொண்டு சால்வன் அவளைத் தள்ளிவிட்டான். இதைக் கேட்டு அவளுடைய பெற்றேரர்களும் அவளைத் தள்ளிவிட்டார்கள். இப்பொழுது புருஷனில்லாமல் புத்ரனில்லாமல் பெற்றேரர்களில்லாமல் ராஜகன்யையாய்ப் பிறந்தும் நிகரற்ற ரூபலாவண்யம் முதலிய உத்தம குணங்களை அடைந்தும் அநாதையாய்க் காடுகளிலும் வனங்களிலும் அலைந்து திரிகிருள். இவ்வளவு கஷ்டமும் துக்கமும் அவளுக்கு உன்னுல் வந்தபடியால் நீ அவளை மறுபடியும் அங்கீகரிக்கக்கடவா” யென்ருர். அதைக் கேட்டுப் பீஷ்மர் பரசுராமரை நமஸ்கரித்து “ஸ்வாமி! இவளை மறுபடியும் என் ஸஹோதரனுக்கு நான்

விவாஹம் செய்விக்கமுடியாது. இவளும் சால்வனும் ஒருவர்க்கொருவர் ஆசைகொண்டு விவாஹஞ்செய்து கொள்வதாய் நிச்சயித்திருந்தார்கள். ஆகையால் இவள் பிறருடைய ஸ்த்ரீயானுள். நான் ப்ரஹ்மசர்ய வ்ரதத்தை அனுஷ்டித்திருப்பதால் இவளை விவாஹஞ்செய்ய முடியாது. பயத்தாலும் இரக்கத்தாலும் காமத்தாலும் தனம், அதிகாரம், கீர்த்தி, ராஜ்யம் முதலியவைகளை அடையவேண்டுமென்ற விருப்பத்தாலும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் நான் க்ஷத்ரிய தர்மத்தையாவது செய்த ப்ரதிக்ஞையையாவது தவறமாட்டேன். வேறு எவ்விடத்திலும் தங்களுடைய ஆக்ஞையைச் சிரஸால் வஹித்து நிறைவேற்ற ஸித்தமாயிருக்கிறே''னென்றூர். அதைக் கேட்டுப் பரசுராமன் கோபத்தால் கண்கள் சிவக்க ''நீ என் கட்டளையை மீறினுல் உன்னையும் உன் மந்த்ரிகளையும் ஸைன்யங்களையும் இந்த க்ஷணத்திலேயே நாசஞ்செய்வே''னென்றூர். பீஷ்மர் எவ்வளவு ப்ரார்த்தித்தும் அவருடைய கோபம் தணியவில்லை. பிறகு பீஷ்மர் ''ஸ்வாமி! தாங்கள் எனக்கு ஆசார்யர் குரு பிதா; ஆனுலும் என் தர்மத்தை விடுவதைக் காட்டிலும் தங்களுடைய கையால் மரணமடைவது மேலானது. ஆகையால் குருக்ஷேத்ரத்தில் நான் தங்களுடன் யுத்தஞ் செய்கிறேன். தங்களுடைய அனுக்ரஹத்தாலும் நான் அனுஷ்டிக்கும் தர்மத்தின் பலத்தாலும் ஸத்யத்தின் மஹிமையாலும் என்னை ஆபத்திலிருந்து ரக்ஷித்துக்கொள்வேன். தாங்கள் க்ஷத்ரிய வம்சத்தை இருபத்தொரு தடவை வேரறுத்தீர்களென்று கீர்த்தி பெற்றிருக்கிறீர்கள். ஆனுல் அது பீஷ்மனென்று ஒருவன் அக்காலத்தில் இருந்தால் அப்படி நேரா''தென்றூர். அதைக் கேட்டுப் பரசுராமரும் மிகுந்த ஸந்தோஷமடைந்து ''பீஷ்ம!

இன்று உன்னைப் பெற்ற கங்கை புத்ரனில்லாமல் தபிக்கப் போகிறாள். சீக்ரத்தில் என்னுடன் யுத்தஞ் செய்ய ஸித்த மாகக்கடவாய்"யென்றார்.

பிறகு அவ்விருவரும் குருக்ஷேத்ரத்தில் ஒருவரை யொருவர் எதிர்த்துக் கோரயுத்தஞ்செய்ய ஆரம்பித்தார்கள். அப்பொழுது தேவதைகளும் ரிஷிகளும் கூட்டங் கூட்டமாய் ஆகாசவீதியில் இந்த அபூர்வமான யுத்தத்தைப் பார்க்க வந்திருந்தார்கள். இப்படியிருக்கையில் பீஷ்மருடைய தாயான கங்கை தன்னால் கூடியவரையில் அந்த யுத்தத்தைத் தடுக்க முயன்றும் பீஷ்மரையும் பரசுராமரையும் தனித் தனியாய் ப்ரார்த்தித்தும் அவர்கள் இணங்கவில்லை. பிறகு அவ்விருவரும் அநேக தினங்கள்வரையில் யுத்தஞ்செய்தார்கள். பரசுராமர் தன் யோகமஹிமையால் ரதத்தையும் குதிரைகளையும் கவசத்தையும் ஆயுதங்களையும் ஸிருஷ்டித்துக்கொண்டார்; அவருடைய பரமமித்ரனை அகிருதவ்ரணனென்பவன் ஸாரதியாயிருந்தான். அப்பொழுது பீஷ்மர் ரதத்தை விட்டிறங்கிப் பரசுராமரிடத்தில் வந்து ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து "ஸ்வாமி! தாங்கள் எனக்குப் பராக்ரமத்தில் ஸமமாயிருந்தாலும் அதிகமாயிருந்தாலும், தாங்கள் எனக்கு ஆசார்யனாயிருந்தாலும் என்னால் கூடியவரையில் யுத்தம் செய்யத் தயாராயிருக்கிறேன். நான் ஜயமடையும்படி ஆசீர்வாதம் செய்ய ப்ரார்த்திக்கிறே"னென்றார். அதற்கு ராமன் "குழந்தாய்! க்ஷேமத்தை விரும்புகிற க்ஷத்ரியன் அப்படியே செய்யவேண்டியது. கீர்த்திபெற்றவர்களுடன் எப்பொழுதும் யுத்தத்தைத் தேடவேண்டியது. நீ இப்படிச் செய்யாதிருந்தால் உன்னைச் சபித்திருப்பேன். ஆனால் உனக்கு ஜயம் கிடைக்கும்படி நான் ஆசீர்வதிக்க

முடியாது; நானும் அதையே விரும்புகிறே" னென்றார். பிறகு பீஷ்மருக்கும் பரசுராமருக்கும் கோரயுத்தம் நடந்தது. அப்பொழுது தன்னிடத்தில் பரசுராமருடைய பாணங்கள் விழும்வரையில் பொறுத்திருந்து பிறகு பீஷ்மர் "ஸ்வாமி! இனி நான் தாங்கள் ஆசார்யரென்பதை மறந்து கேவலம் சத்ருவென்றே நினைத்து யுத்தஞ்செய்யப் போகிறேன். நான் தங்களிடத்தில் விளங்கும் ப்ராஹ்மண்யத்தைப் பாணங்களால் அடிக்கமாட்டேன். தாங்கள் இப்பொழுது அனுஷ்டிக்கும் க்ஷத்ரியத்தன்மையை மாத்ரம் நாசஞ்செய்கிறே" னென்று யுத்தஞ்செய்து வந்தார். இப்படிப் பல தினங்கள் வரையில் ஒருவர்க்கொருவர் களைக்காமல் யுத்தஞ்செய்தார்கள். மனுஷ்யர்கள் கந்தர்வர்கள் அஸுரர்கள் தேவர்கள் முதலிய கணங்களுக்குள் வழங்கும் அஸ்த்ரசஸ்த்ரங்களை ப்ரயோகித்து ஆகாசத்தையும் பூமியையும் திக்குகளையும் மறைத்தார்கள். பிறகு ஒருநாள் பீஷ்மருடைய ஸாரதி பரசுராமருடைய பாணத்தால் மரணமடைந்தான். பிறகு பீஷ்மர் தன் சத்ருவின் கடுமையான பாணவர்ஷத்தால் தேஹம் பிளந்து மூர்ச்சையடைந்து தரையில் விழுந்தார். அப்பொழுது எட்டுத் திவ்யபுருஷர்கள் அவருடைய கண்ணிற்குத் தோன்றி அவரைப் பூமியில் படாமல் தாங்கிக்கொண்டார்கள். அவருடைய முகத்தில் ஜலத்தைத் தெளித்துக் "குழந்தாய்! பயப்படாதே. முடிவில் ஜயத்தை அடைவா" யென்று ஆசீர்வதித்தார்கள். பீஷ்மர் ச்ரமந்தெளிந்து எழுந்து பார்க்கையில் தன் தாயான கங்கை ரதத்திலிருந்து குதிரைகளைப் பிடித்துக்கொண்டிருப்பதையும் தன்னைக் சத்ருவின் பாணங்களிலிருந்து ரக்ஷிப்பதையும் கண்டு அவளுக்கு நமஸ்காரஞ்செய்து அனுப்பிவிட்டுத் தானே குதிரைகளை நடத்திக்கொண்டு

யுத்தஞ்செய்தார். பிறகு ஒரு நாள் யுத்தம் முடிந்த வுடன் பீஷ்மர் ராத்ரி படுக்கையில் தனியாய்ப் படுத்துக் கொண்டிருக்கையில் முன் தோன்றின எட்டுத் திவ்ய புரு ஷர்களான ப்ராஹ்மணர்கள் அவருக்கெதிரில் நின்று"பயப் படாதே! நாங்கள் உன்னைக் காப்பாற்றுகிறோம். எங்களு டைய அம்சத்தால் உன் தேஹம் ஏற்பட்டிருக்கிறது. நீ ஜயத்தை அடைவாய். இதோ நாங்கள் கொடுக்கும் அஸ்த் ரத்தைப் பெற்றுக்கொள். இது இந்த லோகத்தில் யாருக் கும் தெரியாது. பரசுராமருக்கும் தெரியாது. இது ப்ரஹ் மாவால் நிர்மிக்கப்பட்டது. ப்ரஸ்வாபனமென்று இதற்குப் பெயர். இது பரசுராமனைக் கொல்லாமல் அவரை ஜயிக் கும். ஆகையால் உனக்கு யாதொரு பாபமும் நேராது. அவரை ஜயித்து மறுபடியும் ஸம்போதனமென்ற அஸ்த் ரத்தால் அவரை எழுப்பெ"ன்று சொல்லி மறைந்தார்கள்.

மறுநாள் யுத்தத்தில் பீஷ்மர் பரசுராமரால் மிகுந்த உபத்ரவத்தை அடைந்து திவ்யாஸ்த்ரத்தை ப்ரயோகிக்கலா மாவென்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில், ஆகாசத் திலிருந்து ஒரு பெரிய த்வனி உண்டாய் "பீஷ்ம! ப்ரஸ்வா பன அஸ்த்ரத்தை ப்ரயோகிக்காதே"யென்றது. பிறகு நாரதர் "பீஷ்ம! இதோ ஆகாசத்திலுள்ள தேவர்கள் உன் னைத் தடுக்கிறார்கள். பரசுராமர் ப்ராஹ்மணன்; உன் ஆசார்யர்; அவரை அவமானப்படுத்தாதே"யென்றார். அப் பொழுது முன் தோன்றின எட்டுத் திவ்ய புருஷர்கள் பீஷ் மரைப் பார்த்துக் "குழந்தாய்! நாரதர் சொல்லுகிறபடி செய். அது க்ஷேமத்தைக் கொடுக்கு"மென்றார்கள். உடனே பீஷ்மர் அந்தத் திவ்யாஸ்த்ரத்தை ப்ரயோகிக்காமல் தன்னி டத்தில் வருவித்துக்கொண்டு அதை ப்ரஹ்மதேஜஸுடன் ஜ்வலிக்கச் செய்தார். அந்த ப்ரஹ்மாஸ்த்ரம் மறுபடியும்

ஸம்ஹரிக்கப் பட்டதைக் கண்டு பரசுராமர் வெட்கத்தா லும் வருத்தத்தாலும் தலைகுனிந்து, "என்னைப் போல் புத் தியற்றவனுண்டோ? பீஷ்ம! உன்னால் நான் ஜயிக்கப்பட் டே"னென்றார். உடனே அவருடைய பிதாவான ஜமதக்னி யும் பாட்டனை ரிசீகரும் அவருக்கெதிரில் தோன்றி அவரை ஸமாதானஞ்செய்து ப்ராஹ்மண தர்மத்தை விட்டு க்ஷத்ரிய தர்மத்தை அனுஸரித்து ஆயுதமெடுத்து யுத்தஞ் செய்வது தர்மமல்லவென்றும், தேவகார்யமாய்ப் பகவான் க்ஷத்ரியர்களுடைய நாசத்தைச் செய்விப்பதற்காக ஓர் கரு வியாய் அவரை உபயோகித்தாரென்றும், அந்தக் கார்யம் ஆனபிறகு க்ஷத்ரிய தர்மத்தை விடவேண்டுமென்றும், பீஷ்மர் வஸுக்களில் ஒருவரென்றும், யாராலும் ஜயிக்கப் படமாட்டாரென்றும் போதித்தார்கள். அதற்குப் பரசு ராமர் "நான் இதுவரையில் யுத்தத்தில் பின்வாங்கின தில்லை. நான் யுத்தத்தை ஆரம்பித்த பிறகு நிறுத்துவ தில்லையென்று என் ப்ரதிக்ஞை. உங்களுக் கிஷ்டமிருந் தால் பீஷ்மனை நிறுத்தச் சொல்லுங்க"ளென்றார், அப்பொ ழுது அந்த ரிஷிகளும் நாரதரும் பீஷ்மரை அப்படியே கேட்டுக்கொண்டார்கள். ஆனால் அவர் "நான் க்ஷத்ரி யன். யுத்தஞ்செய்வது என் தர்மம், யுத்த களத்தில் ஜய த்தை அடைவேன். அல்லது தேஹத்தை விடுவேன். ஆகையால் எந்தக் காரணத்தாலும் நான் அதர்மத் தைச் செய்யமாட்டே"னென்றார். பிறகு அவர்கள் பர சுராமரைப் பல விதமாய்ப் போதித்து வேண்டிக்கொள்ள அவர் அதற்கிணங்கித் தன் ஆயுதங்களை வைத்துவிட்டார். அப்பொழுது எட்டுத் திவ்ய புருஷர்களும் பீஷ்மருக் கெதி ரில் தோன்றிக் "குழந்தாய்! உன் ப்ரதிக்ஞையை நிறைவேற் றினாய். உன் ஆசார்யனை விதிப்படி நமஸ்கரித்துப் பூஜிக்

கக்கடவா" யென்றார்கள். அவர் அப்படியே அவருடைய பாதங்களில் தன் தலையை வைத்து வணங்கினார். பரசுராமர் அவரை மிகுந்த அன்புடன் வாரியணைத்துக் "குழந்தாய்! ஸகல லோகங்களிலும் உன்னைப் போன்ற வீரன் கிடைப்பதரிது. நீ என்னுடன் இவ்வளவு தினங்களாய்ச் செய்த யுத்தத்தால் நான் அளவற்ற திருப்தி யடைந்தேன்" னென்று கொண்டாடி, அம்பையை அழைத்துப் "பெண்ணே! நான் உனக்கு ப்ரதிக்ஞை செய்தபடி என்னால் கூடியவரையில் பீஷ்மருடன் யுத்தஞ்செய்தேன். ஆயினும் அவனை ஜயிக்க முடியவில்லை; வேறு யாரால் முடியும்? இனி உன்னிஷ்டப்படி எங்கேயாவது போ, உன்னைக் காப்பாற்றுகிறவர்கள் கிடையாதெ"ன்றார்.

அதற்கு அம்பை "ஸ்வாமி! நான் தங்களைச் சரணமடைந்தேன். தாங்கள் எனக்காகத் தங்களுடைய பூர்ணசக்தியையும் உபயோகித்துப் பீஷ்மருடன் யுத்தஞ்செய்தீர்கள். என் துரதிருஷ்டத்தால் ஜயமடையவில்லை. ஆனாலும் நான் அந்தப் பீஷ்மரை மறுபடியும் ப்ரார்த்திக்கமாட்டேன். அவரை யுத்தத்தில்கொல்லும்படியான கடுந்தபஸைச் செய்யப் போகிறே"னென்று அவ்விடம் விட்டுச் சென்றாள். பரசுராமரும் ரிஷிகளும் தேவகணங்களும் பீஷ்மரைக் கொண்டாடி ஆசீர்வதித்துத் தங்களிருப்பிடம் சென்றார்கள்.

---

### அம்பை நதியானது

பிறகு அம்பை வனத்தில் வெகுகாலம் கடுந்தபஸ் செய்துகொண்டிருந்தாள். ஒரு நாள் கங்கை திவ்யரூபத்துடன் அவளிடத்தில் வந்து "பெண்ணே! எதற்காக இபபடித் தேஹத்தை வாட்டிக் கடுந்தபஸ் செய்கிறா"யென்றாள். அதற்கு அம்பை "நான் பீஷ்மனைக் கொல்வதற்கு

உபாயத்தைத் தேடுகிறேன்"னெனக்,கங்கை "மதியற்றவளே! உன் எண்ணம் ஒருநாளும் நிறைவேறாது. நீ சீக்ரத்தில் ஓர் அல்ப நதியாவாய். வருஷத்தில் எட்டு மாஸங்கள் வரையில் ஜலமில்லாமல் மழைக்காலங்களில் மாத்ரம் ஜலப்ரவாஹமிருக்கும். உன்னை ஒருவரும் அறியார்கள். உன் ஜலம் பலரால் உபயோகிக்கப்படாது. முதலைகள் முதலிய துஷ்டஜந்துக்களால் நிறைந்து யார்க்கும் பயத்தை உண்டாக்குவா"யென்று சபித்தாள்.

பிறகு அம்பை யாத்ரைசெய்துகொண்டிருக்கையில் ஒரு நாள் வத்ஸபூமி யென்ற விடத்திற்கு வந்தவுடன் பூமியில் விழுந்து நதியாய் ஓடவாரம்பித்தாள். அதற்கும் வத்ஸபூமியென்றே பெயர். ஆனால் தன் தபோமஹிமையால் அவளுடைய தேஹத்தில் பாதி மாத்ரம் நதியாய் மாறிற்று. மிகுந்த பாதி வத்ஸபூமியென்றவிடத்தில் முன்போல் பெண்ணாகவேயிருந்தது.

---

## அம்பையின் மரணம்

பிறகு அம்பை ஒருநாள் ஓரிடத்தில் தபஸ்செய்துகொண்டிருக்கையில் பரமசிவன் அவளுக்கு ப்ரத்யக்ஷமாய்ப் "பெண்ணே! உன் தபஸால் திருப்தியடைந்தேன். உன் கோறிக்கை நிறைவேறும். பீஷ்மனை யுத்தகளத்தில் நீ கொல்வா"யென்றார். அதற்கு அம்பை "ஸ்வாமி! நானோ ஸ்த்ரீ.யுத்தஞ் செய்வதெங்கே?பீஷ்மனைக் கொல்வதெங்கே!" யென்றாள். மஹாதேவர் "என் வார்த்தை பொய்யாகாது. சிறிது காலத்தில் நீ புருஷனாவாய், த்ருபதராஜனுடைய வம்சத்தில் பிறந்து மஹாரதனாய்அஸ்த்ரசஸ்த்ரங்களின் ரஹஸ்யத்தை அறிந்தவனாய்ப் பீஷ்மனை யுத்தத்தில் கொல்வாய், வேறொரு தேஹத்தை எடுக்கும் பொழுது உனக்கு இதெல்

லாம் ஞாபமிருக்கக்கடவ”தென்றார். உடனே அம்பை கட்டைகளை அடுக்கி யமுனைக்கரையில் தான் ஸகல பூதங்க ளும் பார்த்துக்கொண்டிருக்கையில் “பீஷ்மனைக் கொல்வ தற்காக இந்தத் தேஹத்தை விடுகிறே”னென்று அக்னியில் ப்ரவேசித்தாள்.

---

சிகண்டி

முன்பு சிகண்டினியும் ஒரு யக்ஷனும் ரூபத்தை மாற்றிக்கொண்டார்களென்று சொன்னோமே ஒருநாள் யக்ஷராஜனான குபேரன் அந்த ஸ்தூணனென்ற யக்ஷனு டைய வீட்டிற்கு வந்தான். ஆனால் அவனைக் காண வில்லை. தன் பரிவாரங்களைப் பார்த்து, “இந்த முட்டாள் தன் வீட்டிற்கு வந்திருக்கும் என்னை ஏன் உபசரிக்க வில்லை? அவனைத் தகுந்தபடி தண்டிக்கவேண்டும். அவ னெங்கே”யென்றான். அப்பொழுது யக்ஷர்கள் “ஸ்வாமி! த்ருபதராஜனுடைய புத்ரியான சிகண்டினியென்றவளுக் குத் தன் புருஷரூபத்தைக் கொடுத்து அவளுடைய ஸ்த்ரீ ரூபத்தைத் தான் வாங்கிக்கொண்டிருக்கிறான். ஆகையால் தங்களுக்கெதிரே வர வெட்கமடைந்து மறைந்துகொண் டிருக்கிறா”னென்றார்கள், அப்பொழுது குபேரன் அவ னைத் தனக்கெதிரில் வருவித்துக், கோபங்கொண்டு “நீ இப்ப டிச் செய்ததால் எல்லா யக்ஷர்களுக்கும் அபகீர்த்தியை ஸம்பாதித்தாய். ஆகையால் இந்த ரூபம் உனக்கு எந்நாளு மிருக்கக்கடவது. இப்படியே சிகண்டினியும் எந்நாளும் புருஷனாயிருக்கக்கடவ” தென்று சபித்தான். அந்த யக்ஷன் குபேரனுடைய பாதங்களில் விழுந்து “ஸ்வாமி! இந்தச் சாபத்திற்கு ஓர் முடிவை ஏற்படுத்தவேண்டு” மென்று வேண்டக், குபேரன் மனமிரங்கி “சிகண்டி மரண

மடைந்தவுடன் உனக்கு முன்ரூபம் கிடைக்கு” மென்ருன். பிறகு சிகண்டினி அந்த யக்ஷனைக் கண்டு தன் ரூபத்தை மாற்றிக்கொள்ளும்படி கேட்க, அந்த யக்ஷன் நடந்த விருத்தாந்தங்களைத் தெரிவித்து “இது கர்மகதி. உன் எண்ணமும் இதனல் நிறைவேறு” மென்று சொல்லி அனுப்பினன். பிறகு சிகண்டி த்ரோணரிடத்தில் அஸ்த்ரசஸ்த்ர வித்யைகளைப் பூர்ணமாய்க் கற்று, மஹாரதனனன்.

திருதராஷ்ட்ரனுடைய புத்ரர்களான துர்யோதனன் முதலானவர்களுக்கும் பாண்டுவின் புத்ரர்களான தர்மபுத்ரர் முதலானவர்களுக்கும் வரவர த்வேஷம் அதிகரித்தது. ஓர் ஸமயத்தில் பாண்டவர்களைத் துர்யோதனன் தன் நகரத்திற்குத் தருவித்து, யுதிஷ்டிரர் சூதாடுவதில் ப்ரியமுள்ளவரென்றும் தன்னைச் சூதாட்டத்திற்கு அழைத்தால் மறுக்க மாட்டாரென்றும் அறிந்து தன் மாமனை சகுனியை அவருடன் சூதாடச் செய்தான். அக்ஷவித்யையில் நிபுணனை சகுனி, யுதிஷ்டிரரைப் பலமுறை ஜயித்து அவருடைய நாடு நகரங்களையும் ஐச்வர்யத்தையும் கவர்ந்தான். பிறகு பாண்டவர்கள் பன்னிரண்டு வர்ஷங்கள் வரையில் வனத்தில் வஸிக்கவேண்டுமென்றும் பிறகு ஒரு வர்ஷம் ஒருவராலும் கண்டுபிடிக்கப்படாமல் எங்கேயாவது மறைந்திருக்கவேண்டுமென்றும் ஏற்பாடுசெய்துகொண்டு அப்படியே பாண்டவர்களை வனத்திற்கனுப்பினன். அந்தக் காலம் முடிந்தவுடன் பாண்டவர்கள் திரும்பிவந்து தங்களுடைய பாகத்தைக் கேட்க அப்பொழுதும் கொடுக்க இஷ்டமில்லாமல் மறுத்தான். பீஷ்மர், த்ரோணர், விதுரர், மற்றுமுள்ள பெரியோர்கள், வ்யாஸர் மைத்ரேயர் முதலிய ரிஷிகள் எவ்வளவு புத்தி சொல்லியும், திருதராஷ்ட்ரனும் அவனுடைய

புத்ரர்களும் கொஞ்சங்கூட ஸம்மதிக்கவில்லை. பிறகு ஸ்ரீ கிருஷ்ணன் பாண்டவர்களுக்காகத் தூது சென்று கௌர வர்களைப் பலவிதத்திலும் போதித்தும் அவர்கள் ஸம்ம திக்கவில்லை. ஆகையால் இருதிறத்தாரும் யுத்தஞ் செய்ய நிச்சயித்தார்கள். பூமியிலுள்ள அரசர்களில் சிலர் பாண்டவர் களுடனும் சிலர் கௌரவர்களுடனும் சேர்ந்தார்கள். பீஷ் மர் த்ரோணர் கிருபர் முதலிய பெரியோர்கள் துர்யோதன னுடைய நடத்தை கெட்டதென்றும், அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் பாபிகளென்றும் துஷ்டர்களென்றும், ஸாதுக்களையும் பகவானையும் த்வேஷிக்கிறவர்களென்றும் நன்றாய் அறிந்தும், தங்களுடைய கடமையை நிறைவேற்று வதிலேயே நோக்கமுள்ளவர்களாய் அந்தந்த ஸமயங்களில் தங்களால் கூடியவரையில் புத்திசொல்லி நன்னடத்தையை உபதேசித்துத் துன்மார்க்கத்திலிருந்து துர்யோதனன் முத லியவர்களைத் திருப்புவதற்குத் தங்களாலியன்ற யத்னங் னங்களைச் செய்துவந்தார்கள். அவை யாவும் பலிக்காமற் போனதைக் கண்டு, அக்காலத்தில் அரசனாய் ஆளுகிற வனும் குருவம்சத்தில் மூத்தோனுமான திருதராஷ்ட்ர னுடைய அன்னத்தை உண்டு வளர்ந்த தங்களுடைய தேஹத்தை அவனுக்காக யுத்தத்தில் விட நிச்சயித்து அவனுடைய பக்கத்தில் சண்டை செய்தார்கள். ஆனால் அவர்களுடைய மனஸும் ஆசீர்வாதமும் தர்மாத்மாக் களான பாண்டவர்களிடத்திலேயே இருந்தன. இரு திறத்தாரும் தங்களுடைய ஸைன்யங்களைச் சேர்த்து அணிவகுத்துக் குருக்ஷேத்ரமென்ற புண்யபூமியில் யுத் தஞ் செய்ய உததேசித்தார்கள். அப்பொழுது துர்யோ தனன் தன் குலத்திற்கு மூத்தவரும் எல்லோராலும் பூஜிக் கப்படுகிறவரும் நிகரற்ற பராக்ரமமுள்ளவருமான பீஷ்

மரைத் தன் ஸைன்யத்திற்கு நாயகனுயிருக்கும்படி வேண்டிக்கொண்டான். அவர் அதற்கு ஸம்மதித்தார்.

பீஷ்மர் அதை அங்கீகரிக்கத், துர்யோதனன் "ஸ்வாமி! இருதிறத்து ஸைன்யத்திலுமுள்ள ரதிகள் அதிரதிகள்கள் அர்த்தரதிகர்கள் மஹாரதிகர்கள் யாரென்றறிய விரும்புகிறே" னென்முன். அப்பொழுது பீஷ்மர் கௌரவபாண்டவ வீரர்களின் பராக்ரமத்தை வர்ணித்துக்கொண்டு வருகையில் "உனக்கு ப்ரியமான மித்ரனும் தன் பராக்ரமத்தைப் பற்றி எப்பொழுதும் பெருமைபேசிக்கொள்ளுகிறவனும் பாண்டவர்களுடன் விரோதஞ் செய்யும்படி உன்னை எப்பொழுதும் தூண்டிவிடுகிறவனுமான இந்தக் கர்ணன் ரதியுமல்ல அதிரதனுமல்ல; இவன் எல்லையற்ற கர்வங்கொண்டவன், அல்பன்; இவனை நீ மிகவும் உயர்ந்த பதவியில் வைத்திருக்கிருய்; இவனை நீ உன் மித்ரனுயும் மந்த்ரியாயும் விச்வாஸ பாத்ரமாயும் வைத்துக்கொண்டிருக்கிருய். கேட்பவர்களுக்குத் தடையில்லாமல் கொடுக்கிறவன்; ஆனல் திவ்யமான கவசத்தையும் குண்டலங்களையும் இழந்தான். தன் ஆசார்யனை பரசுராமராலும் ஒரு ப்ராஹ்மணனுலும் சபிக்கப்பட்டான். ஸ்வபாவமான கவசமில்லாதபடியால் அவன் அர்த்தரதனென்றெண்ணுகிறேன். அர்ஜுனனுடைய கண்ணில் பட்டால் இவன் உயிருடன் தப்பமாட்டா"னென்முர். அப்பொழுது "த்ரோணுசார்யரும் இது நிஜமே. தாங்கள் சொல்வது ஒரு நாளும் பொய்யாகாது. ஒவ்வொரு யுத்தத்திலும் இவன் வீண் பெருமை பேசிக்கொள்வதேயல்லாது முன்னிற்கு வருவதில்லை. யுத்தஸமயத்தில் இவனுக்குப் புத்தி மயங்குகிறது. ஆகையால் இவன் அர்த்தரதிகனென்றே எண்ணுகிறே"னென்முர்.

## கர்ணனுடைய ப்ரதிக்ஞை.

இதைக் கேட்ட கர்ணன் கோபத்தால் கண்கள் சிவக்கப் பீஷ்மரைப் பார்த்து "நீர் உமது இஷ்டப்படி என்னைத் தூஷிக்கிறீர். நான் யாதொரு பாபத்தையும் செய்யாவிட்டாலும் உமக்கு என்னிடத்திலுள்ள த்வேஷத்தால் என்னை இப்படி அவமதிக்கிறீர். இதை எல்லாம் துர்யோதனனுக்காகப் பொறுத்துக்கொண்டிருக்கிறேன். நான் யுத்தத்தில் பயந்தவனென்றும் பின்வாங்குகிறவனென்றும் சொன்னீரல்லவா. என்னை அர்த்தரதனென்று நீர் சொன்ன வார்த்தை உமக்கே தகும். நீரே அர்த்தரதன், லோகசத்ரு, கௌரவர்களுக்கு எப்பொழுதும் விரோதத்தையும் பாண்டவர்களுக்கு ஹிதத்தையும் தேடுகிறவர், ஸ்வாமித்ரோஹி, உம்மைக் காட்டிலும் பலபராக்ரமமுள்ளவர்களிடத்தில் அஸூயை கொண்டு எக்காலத்திலும் அவர்களை அவமதிப்பதும் குறைவாய்ப் பேசுவதும் உமது ஸ்வபாவம். வயஸ் தனம் மித்ரர்கள் முதலியவைகளால் க்ஷத்ரியன் மஹாரதனாகமாட்டான். சூத்ரன் வயஸாலும் வைச்யன் தனத்தாலும் ப்ராஹ்மணன் ஞானத்தாலும் மேன்மையடைவதுபோல், க்ஷத்ரியன் பலபராக்ரமத்தாலேயே மேன்மையடைகிறான். உமக்குத் தோன்றினபடி வீரர்களை ரதிகளென்றும் அதிரதர்களென்றும் மஹாரதர்களென்றும் வகுக்கிறீர். துர்யோதன! நீயாவது நிஜத்தைத் தெரிந்துகொள். துஷ்டனான இந்தப் பீஷ்மரை விலக்கிவிடு. உன் குடும்பத்திலும் உன் ஸைன்யத்திலும் மித்ரர்களிலும் இவர் கலஹஞ்செய்து உன்னை வேரோடழிக்கப் பார்க்கிறார். நமது பலபராக்ரமத்தை ஸகல விதத்தாலும் குறைக்கப் பார்க்கிறார். வீரர்களுடைய பராக்ரமத்தை அறியும் தன்மை இவருக்கேது? நான் ஒருவனே பாண்டவ

ஸைன்யம் யாவையும் பாண்டவர்களேயும் ஒருநொடியில் நாசஞ்செய்வேன். கிழவனும் துஷ்டனும் மிருத்யுதேவ தையால் தூண்டப்பட்டவனுமான இந்த க்ஷத்ரிய அதம னுக்கும் யுத்தத்திற்கும் மந்த்ராலோசனேக்கும் எவ்வளவு தூரம்! ஸகல லோகங்களேயும் தான் ஒருவனே ஜயிக்க முடியுமென்றும் தன்னேவிட தீரன் ஒருவருமில்லே யென் றும் மூடத்தனத்தால் சொல்வதை நீ கவனிக்கக்கூடாது வயஸ் முதிர்ந்தவர்களின் வார்த்தைகளே நாம் கேட்கவேண் டியது நிஜமே. ஆனால் வயஸ் அளவுக்கு மிஞ்சிச் சென்று விட்டால் அவன் கேவலம் குழந்தையைப் போல் புத்தியற்ற வனுகிறுன். இப்பொழுது நான் பாண்டவர்களே யுத்தத்தில் கொன்றால் அந்தக் கீர்த்தி ஸேனுநாயகனுன இந்தப் பீஷ்ம ருக்கல்லவா கிடைக்கும். ஆகையால் இந்தப் பீஷ்மனுள்ள வரையில் நான் யுத்தஞ் செய்வதில்லே. இவன் இறந்தபிறகு நான் யுத்தகளத்தில் புகுந்து உனக்கு ஜயலக்ஷ்மியை விவா ஹஞ்செய்விக்கிறே" னென்றுன். அதற்குப் பீஷ்மர் "நான் அநேக வர்ஷங்களாய் எதிர்பார்த்திருந்த இந்த ஆபத் இப் பொழுது நேர்ந்துவிட்டது. மஹா ஸமுத்ரத்தைப்போன்ற இந்த யுத்தத்தின் பாரம் என்மேல் தங்கியிருக்கிறது. நமக் குள் கலஹஞ்செய்வது என் ஸ்வபாவமல்ல. எனக்கு இஷ்டமுமல்ல. அதற்காகப் பிறந்திருப்பவன் நீயே. நான் கிழவனுனுலும் நீ பூர்ணயௌவனமுடையவனுனுலும் உன் கொழுப்பை அடக்கி ப்ராணனேக் கொள்ளேகொள்வது எனக்கு விளேயாட்டு. ஜமதக்னியின் புத்ரரான பரசு ராமரிடத்தில் நீ வில்வித்தை கற்றுய். அந்தப் பரசுராமரு டைய பாணங்களே என்னே ஒன்றும் செய்யமுடியவில்லே; பதரைப்போன்ற உன்னுல் எனக்கு என்ன கெடுதி நேரும்? தன் பராக்ரமத்தைத் தானே புகழ்ந்துகொள்வதை ஸாதுக்

கள் ச்லாகிக்கமாட்டார்கள். ஆனாலும் உனக்குப் புத்தி கல்பிப்பதற்காகவும் உன் நிஜமான ஸ்திதியை உனக்குத் தெரிவிப்பதற்காகவும் நான் என்னைப்பற்றி இப்படிப் பேச வேண்டியிருக்கிறது. காசிராஜனுடைய கன்யைகளின் ஸ்வயம்வரத்தில் என்னை எதிர்த்த அரசர்கள் என்ன கதியடைந்தார்கள்? கௌரவர்களுக்கு நாசகாலம் ஸமீபித்தபடியால் நீ அவர்களுடன் சேர்ந்திருக்கிறாய். கௌரவ வம்சத்தைவேருடன் அழிக்க நீ ஒருவனே போதுமே. யுத்தத்தில் உன் திறமையைப் பார்ப்போம். நீ இவ்வளவு அலக்ஷ்யமாய்ப் பேசுகிற அர்ஜுனனுடைய பாணத்தால் உன் தலை அறுபட்டு விழுவதை இந்தத் துர்யோதனன் பார்க்கப்போகிறான்" னென்றார்.

கௌரவ பாண்டவ யுத்தமென்ற பாரதயுத்தம் பதினெட்டுத் தினங்களில் முடிந்தது.

---

### கண்ணன் ஆயுதமெடுத்தது.

அதில் பத்துநாள்கள் வரையில் பீஷ்மர் ஸேனாதிபதியாயிருந்தார். முதலாவது நாளில் ச்வேதன் அவரால் கொல்லப்பட்டான். மூன்றாவது நாளில் பீஷ்மரும் அர்ஜுனனும் கடுமையாய் யுத்தஞ்செய்துகொண் டிருக்கையில், அர்ஜுனனுக்கு ஸாரதியாயிருந்த ஸ்ரீகிருஷ்ணன் பீஷ்மருடைய பராக்ரமம் விருத்தியாவதையும் அர்ஜுனன் அவரால் மிகுந்த வருத்தத்தை அடைவதையும் கண்டு "அர்ஜுனன் வரவரக் களைக்கிறான். யுத்தஞ் செய்வதில் திறமை குறைகிறது. இப்படியிருந்தால் பீஷ்மர் பாண்டவ ஸைன்யத்தை ஒரேநாளில் நாசஞ்செய்வார். ஆகையால் பாண்டவர்களை ரக்ஷிக்கும் பொருட்டு, பீஷ்மரை நானே கொல்வே"னென்று நிச்சயித்துத், தன் எண்ணத்தை அர்ஜுனனிடத்தில் சொல்லிவிட்டு;

ஸுதர்சனமென்ற தன் சக்ராயுதத்தை நினைத்தார். அது உடனே வந்து அவருடைய கையில் விளங்கிற்று. ரதத்தி லிருந்து பூமியில் குதித்துப் பீஷ்மரை நோக்கி ஓடிவந்தார். 'பாரதயுத்தத்தில் நான் ஆயுதம் எடுப்பதில்லை' யென்று ப்ரதிக்ஞை செய்த ஸ்ரீகிருஷ்ணன் தன் பக்தனை அர்ஜு னனை ரக்ஷித்து அவனுக்கு ஜயத்தைக் கொடுப்பதற்காகத் தன் ப்ரதிக்ஞையைப் பொய்யாக்கிப் பீஷ்மனைக் கொல்ல வருவதைக் கண்டு இரு ஸைன்யங்களும் பயத்தால் நடுங் கின. ஆனால் பீஷ்மர் ஆயுதங்களை வைத்துவிட்டுத் தலை மேல் கைகூப்பி "ஸ்வாமி! தங்களுடைய ஆயுதத்தால் மரணமடைந்து நித்யமான வைகுண்டத்தில் ஆனந்தத்தை அனுபவிக்கும் பாக்யத்தைப் பெறப் பூர்வஜன்மங்களில் என்ன புண்யம் செய்தேனோ" வென்று ஸ்ரீகிருஷ்ணனு டைய அனந்த கல்யாணகுணங்களை வர்ணித்து ஸ்தோத்ரஞ் செய்தார். அதற்குள் அர்ஜுனன் ரதத்திலிருந்து குதித்து ஓடிவந்து கிருஷ்ணன் பத்து அடிகள் தாண்டுவதற்குள் அவருடைய பாதங்களைப் பிடித்து நமஸ்கரித்து "கேசவ! என்னிடத்தில் கிருபைசெய்யும். உம்முடைய ப்ரதிக் ஞையை மீறலாமா? நான் இன்று கௌரவர்களை ஸம் ஹரிப்பதைப் பாரு"மென்று ப்ரார்த்தித்து ஸ்ரீகிருஷ்ணனை ஸமாதானப்படுத்தி மறுபடியும் தேரில் இருக்கச்செய்தான்.

---

### இன்னுமொரு தடவை.

ஐந்தாவது தினத்தில் பீஷ்மர் துர்யோதனனுக்கு ஸ்ரீகிருஷ்ணனுடைய மாஹாத்ம்யத்தை விஸ்தாரமாய் எடுத்துச் சொல்லிக் "குழந்தாய்! பாண்டவர்களிடத்தில் அவருக்குப் பரமப்ரீதி. யாதொரு ஆபத்தும் அபஜயமும் அவர்களுக்கு நேராதபடி அவர் காப்பாற்றுவார். ஆகை

யால் நீ அவர்களுடன் ஸமாதானஞ் செய்வதே நல்''மென்று பலமுறை போதித்தார். ஒன்பதாவது தினத்தில் துர்யோதனன் தனக்கு ஜயம் கிடைக்காததையும் பாண்டவர்கள் விருத்தியடைவதையுங் கண்டு, கர்ணனை அதற்கு ஏதாவது பரிஹாரம் செய்யும்படி ப்ரார்த்திக்க, அவன் 'பீஷ்மர் ஆயுதங்களை வைத்துவிட்டுச் சண்டையிலிருந்து ஒழிந்தால் நான் பாண்டவர்களை ஒரு நொடியில் நாசஞ்செய்கிறே' னென்றான். அப்பொழுது துர்யோதனன் ராத்ரியில் பீஷ்மரிடத்திற்குப் போய் கர்ணனுடைய அபிப்ராயத்தைத் தெரிவித்து அவனுக்கு யுத்தஞ்செய்யும்படி அனுமதிகொடுக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தான். அதற்குப் பீஷ்மர் அர்ஜுனனுடைய பலத்தையும் வீர்யத்தையும் பராக்ரமத்தையும் வர்ணித்து, ஸ்ரீகிருஷ்ணன் உள்ளவரையில் பாண்டவர்களை ஜயிப்பது அஸாத்யமென்று சொல்லிச் சிகண்டியைத் தவிர பாஞ்சாலர் முதலியவர்களை நானே கொல்லுகிறேனென்று ப்ரதிக்ஞைசெய்தார். அன்றைய யுத்தத்தில் பீஷ்மர் நிகரற்ற பராக்ரமத்தைக் காட்டிச் சத்ருக்களை நாசஞ்செய்வதைக் கண்டு ஸ்ரீகிருஷ்ணன பொறுக்காமல் கடிவாளங்களை விட்டெறிந்து ரதத்திலிருந்து குதித்துக் கர்ஜித்துக்கொண்டு பீஷ்மரைக் கொல்வதற்காக ஓடினார். பூமி நடுங்கிற்று. ஆகாசத்திலிருந்து நக்ஷத்ரங்கள் உதிர்ந்தன. ஸைன்யங்கள் பயத்தால் மூர்ச்சையடைந்தன. ஆனால் பீஷ்மர் தலைமேல் கைகூப்பி ஸ்ரீகிருஷ்ணனைப் பலவிதமாய் ஸ்தோத்ரஞ்செய்து "வாரும், வாரும்; எனக்கு உத்தம கதியைத் தாரும். உமது ஆயுதத்தால் மரணமடைகிறவன் தன்யனே''யென்று கொண்டாடினார். அதற்குள் அர்ஜுனன் ஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு "கிருஷ்ண! ஆயுதம் எடுப்பதில்லையென்ற

உம்முடைய வார்த்தையைப் பொய்யாக்கலாமா? பீஷ்மரை நான் ஸம்ஹரிக்கிறே''னென்று கோரப்ரதிக்ஞை செய்தான்: அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் கோபந்தணிந்து அர்ஜுனனுடைய தேர்த்தட்டில் வந்து உட்கார்ந்தார்.

---

### ந்ன் மரணேபாயம்.

இப்படி பீஷ்மர் கோரமான யுத்தஞ்செய்கையில் பாண்டவர்கள் அதைர்யமடைந்து வேறு உபாயந்தோன்ருமல் ஸ்ரீ கிருஷ்ணனுடைய தூண்டுதலால் பீஷ்மரிடத்தில் சென்று நமஸ்கரித்து அவரால் ஆசீர்வதிக்கப்பட்டார்கள். அப்பொழுது யுதிஷ்டிரர் கைகூப்பி ''ஸ்வாமி! க்ஷத்ரியதர்மத்தை அனுஸரித்து க்ரூரமாயும் லோகமர்யாதைக்கு விரோதமாயுமிருக்கும் ஒரு காரியத்தைச் செய்யப்போகிறேன். தங்களை ஒருவராலும் ஜயிக்கமுடியாது. ஆனால் தாங்கள் இருக்கும் வரையில் எங்களுக்கு ஜயமில்லை. எங்களுடைய ஸைன்யம் சீக்ரத்தில் நாசமாகும். ஆகையால் எங்களுக்கு க்ஷேமத்தையும் ஜயத்தையும் ராஜ்யத்தையும் கொடுக்கும் உபாயத்தைத் தெரிவிக்கவேண்டு'' மென்று ப்ரார்த்தித்தார். அதைக் கேட்டுப் பீஷ்மர் ஸந்தோஷமடைந்து ''குழந்தாய்! நீ சொல்வது எல்லாம் நிஜமே. ஆனால் எனக்கு ஓர் வ்ரதமுண்டு. யுத்தத்தில் ஆயுதங்களை எறிந்துவிட்டவனையும் கீழே விழுந்தவனையும் கவசம் பிளந்து த்வஜம் அறுந்தவனையும் ஓடிக்கொண்டிருக்கிறவனையும் பயத்தால் திகைத்திருக்கிறவனையும் நான் உனக்குக் கீழ்ப்பட்டேனென்றவனையும் ஸ்த்ரீயையும் ஸ்த்ரீயின் பெயரை வைத்துக் கொண்டிருப்பவனையும் காயம்பட்டு யுத்தஞ் செய்யமுடியாதவனையும் ஒரே புத்ரனையுடையவனையும் நீசனையும் நான் எதிர்ப்பதில்லை. அவனுடன் யுத்தஞ்செய்வதுமில்லை. ஏதாவது அபச

குணத்தைக் கண்டாலும் நான் யுத்தஞ்செய்வதில்லை. உன் ஸைன்யத்தில் த்ருபதராஜனுடைய புத்ரனான சிகண்டி முன்பு ஸ்த்ரீயாயிருந்து இப்பொழுது புருஷனாயிருக்கிறான். ஆகையால் நான் அவனுடன் யுத்தஞ்செய்யமாட்டேன். அவனை முன்னால் வைத்துக்கொண்டு அர்ஜுனன் என்னைப் பாணங்களால் அடிக்கட்டும். ஸ்ரீகிருஷ்ணனையும் அர்ஜுனனையுந் தவிர வேறொருவரும் என்னை யுத்தத்தில் ஜயிக்கக்கூடியவர்களில்லை" யென்றார். பிறகு பாண்டவர்களும் ஸ்ரீகிருஷ்ணனும் பீஷ்மருக்கு வந்தனம் செய்து திரும்பிப்போனார்கள்.

---

## பீஷ்மர் பூமியில் விழுந்தது.

அப்படியே அர்ஜுனன் சிகண்டியைத் தன் ரதத்தில் தனக்கு முன்னால் வைத்துக்கொண்டு பீஷ்மரை எதிர்த்தான். அப்பொழுது பீஷ்மர் சிகண்டியுடன் யுத்தஞ்செய்ய ஸம்மதிக்காமல் தன் வில்லையும் பாணங்களையும் வைத்துவிட்டுத் தேர்த்தட்டில் உட்கார்ந்தார். அப்பொழுது தனக்கு அந்தத் தேஹத்தை விட்டுப் போகும் ஸமயம் நேர்ந்ததென்று நினைத்து அதற்கு வேண்டிய கார்யங்களைச் செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது ஆகாசவீதியில் கூடியிருந்த வஸுக்களும் ரிஷிகளும் "குழந்தாய்! நீ நிச்சயித்தது யுக்தமே. யுத்தத்திலிருந்து விலக்கக்கடவாய்" யென்றார்கள். அப்பொழுது நல்ல பரிமளமுள்ள காற்று நாலுதிக்குகளிலும் வீசிற்று. தேவதுந்துபிகள் முழங்கின. தேவர்கள் புஷ்ப மாரி சொரிந்தார்கள். அப்பொழுது அர்ஜுனனுடைய பாணங்களால் தன் தேஹம் பிளக்கப்பட்டுக்கொண்டிருந்தும், சிகண்டியின் அம்புகள் தன் மார்பைத் துளைத்துக்

கொண்டிருந்தும், பீஷ்மர் அதைக் கொஞ்சமும் லக்ஷ்யஞ்செய்யாமல், யுத்தத்திலிருந்து தன் மனதைத் திருப்பி, தன் தேஹத்தில் இரண்டு விரல்கனம் அளவு கூட இடமில்லாமல் பாணங்களால் துளைக்கப்பட்டு ஸூர்யோதயத்திற்கு சற்றுமுன்பு ரதத்தட்டிலிருந்து பூமியில் விழுந்தார். அதைக் கண்டு இருதிறத்து சைன்யங்கள் பயத்தாலும் ஆச்சர்யத்தாலும் துக்கத்தாலும் பெருங்கூச்சலிட்டன. தேஹத்தில் பாணங்கள் நெருங்கிப் பதிந்திருந்ததால் அது பூமியைத் தொடவில்லை. அப்படிப் பாணங்களால் அமைக்கப்பட்ட படுக்கையில் பீஷ்மர் படுத்திருந்தார்.

---

## சரசயனம்.

அப்பொழுது அவருடைய தைவாம்சம் மேற்கொண்டது; பூமி நடுங்கிற்று. மழைத்துளிகள் வேகமாய் வர்ஷித்தன. விழும் ஸமயத்தில் ஸூர்யன் தக்ஷிணாயனத்தில் இருப்பதாய்ப் பீஷ்மர் கவனித்து அப்பொழுது, தான் தேஹத்தை விடுவது உசிதமில்லையென்று எண்ணி, உத்தராயணம் வரும்வரையில் தன் ப்ராணவாயுக்களைத் தேஹத்தில் வைத்துக்கொள்ள நிச்சயித்தார். அதையறிந்து அவருடைய தாயான கங்கை மஹர்ஷிகளை அவரிடத்திற்கு அனுப்பினாள். அவர்கள் ஹம்ஸபக்ஷிகளின் ரூபத்தைத் தரித்து பீஷ்மரிடத்திற்கு வந்து, அவரை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து தக்ஷிணாயனத்தில் தேஹத்தை விடவேண்டாமென்று ப்ரார்த்தித்துப் போனார்கள். அப்படியே செய்வதாய் அவரும் ஸம்மதித்தார். அவருடைய பிதாவான சந்தனுமஹாராஜன் அவருக்குக் கொடுத்திருந்த வரத்தால் மிருத்யுதேவதை அவருடைய இஷ்டமில்லாமல் அவரிடத்தில் வரமுடியாது.

அப்பொழுது பீஷ்மர் உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட யோகத்தை அவலம்பித்துத் தன் மனதை ஸ்ரீ வாஸுதேவனுடைய திருவடிகளில் நாட்டி த்யானஞ்செய்து கொண்டு உத்தராயணம் வரும் நிமிஷத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். கௌரவ பாண்டவ ஸைன்யங்கள் பீஷ்மர் ரதத்திலிருந்து பூமியில் விழுந்ததைக் கண்டு, ஒன்றுயர் கொன்றாமல் யுத்தத்தை நிறுத்திக், கவசங்களையும் ஆயுதங்களையும் வைத்துவிட்டு, ஒன்றுசேர்ந்து விரோதத்தை மறந்து, பீஷ்மரிடத்திற்கு வந்து நமஸ்கரித்துத் தங்களுடைய பெயர்களைச் சொல்லி அபிவாதனஞ்செய்தார்கள். பீஷ்மர் அவர்களை ஆசீர்வதித்து "நீங்கள் என்னிடத்தில் வந்ததால் எனக்கு மிகுந்த ஸந்தோஷமும் திருப்தியுமுண்டாயிற்" றென்றார்.

---

## வீரனுடைய தலையணை.

பிறகு "என் தலை தொங்கிக்கொண்டிருக்கிறது. அதன் கீழ் ஒரு தலையணையை யாராவது வையுங்க" ளென்றார். அதைக் கேட்டு அங்கிருந்த அரசர்கள் நேர்த்தியான வஸ்துக்களால் செய்யப்பட்ட அநேக தலையணைகளைக் கொண்டுவந்தார்கள். அதைக் கண்டு பீஷ்மர் "இவை க்ஷத்ரியவீரன் உபயோகிக்கத் தகுந்ததல்ல" வென்று அவைகளை ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு பீஷ்மர் அர்ஜுனனைப் பார்த்து "இந்த சரசயனத்திற்குத் தகுந்த ஓர் தலையணையைக் கொடுப்பா" யென்றார். உடனே அர்ஜுனன் அவரை நமஸ்கரித்து அவருடைய அநுமதியைப் பெற்றுக், காண்டீவத்தை வளைத்து மந்த்ரங்களால் சுத்தஞ்செய்யப்பட்ட பாணங்களைத் தொடுத்துப் பீஷ்மருடைய தலையை அவை தாங்கும்படி ப்ரயோகித்தான். பீஷ

மர் மிகுந்த ஸந்தோஷத்தை யடைந்து அங்கிருப்பவர்களைப் பார்த்து "அர்ஜுனா! என்னுடைய படுக்கைக்குத் தகுந்த தலையணையைக் கொடுத்ததால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். இதைத் தவிர வேறு எதையாவது எனக்குக் கொண்டுவந்து கொடுத்திருந்தால் நான் உன்னைச் சபித்திருப்பேன். க்ஷத்ரியவீரன் யுத்தகளத்தில் சயனத்தில் இவ்விதமாகவே படுத்திருக்கவேண்டு"மென்று, மற்றவர்களை நோக்கி "நான் இந்தச் சயனத்தில் உத்தராயணம் வரும்வரையில் படுத்திருப்பேன். அப்பொழுது இங்கே வந்து பார்ப்பவர்கள் நான் இந்தத் தேஹத்தை விட்டுப் போவதைக் காணலாம். அரசர்களே! என்னைச் சுற்றிலும் ஆழமான பள்ளத்தை வெட்டுங்கள். பாணங்களால் பிளக்கப்பட்ட தேஹத்துடன் ஸூர்ய பகவானை உபாஸிக்கப்போகிறே"னென்றார். பிறகு நிபுணர்களான வைத்யர்கள் அநேக ஒஷதிகளையும் மருந்துகளையும் பாணங்களை எடுப்பதற்கு வேண்டிய ஆயுதங்களையும் ஸித்தஞ்செய்து கொண்டிருப்பதைப் பார்த்துப் பீஷ்மர் "துர்யோதன! இவர்களுக்குத் தகுந்த மர்யாதை செய்து வேண்டிய தனத்தைக் கொடு. க்ஷத்ரியவீரன் அடைய விரும்பும் உத்தமகதியை அடைந்த எனக்கு இவர்களால் ஆகவேண்டியதென்ன" வென்றார். பிறகு அங்கு வந்த இருதிறத்து அரசர்களும் பீஷ்மரை ப்ரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து அவரிடத்தில் உத்திரவுபெற்றுக்கொண்டு தங்களுடைய கூடாரங்களுக்குச் சென்றார்கள்.

---

### வீரனுடைய பானம்.

மறுநாட் காலையில் ஸகல ராஜர்களும் க்ஷத்ரிய வீரர்களும் ஸ்த்ரீகளும் பாலர்களும் விருத்தர்களும்

ஆயிரக்கணக்காய்ப் பீஷ்மரைச் சூழ்ந்து நமஸ்கரித்து அவரைப் புஷ்பங்களாலும் மாலைகளாலும் அக்ஷதைகளாலும் சந்தனப்பூச்சுகளாலும் பூஜித்தார்கள். தேஹமெங்கும் பாணங்களாலும் பிளக்கப்பட்டு அந்த உபத்ரவத்தால் ஸமீபத்திலிருப்பவர்களைப் பார்த்து "தாஹத்தைத் தீர்ப்பதற்குச் சுத்தமான ஜலத்தைக் கொடுங்க"ளென்றார். உடனே தங்கக் குடங்களில் குளிர்ந்த ஜலத்தையும் ச்ரேஷ்டமான ஆஹார பதார்த்தங்களையும் கொண்டுவந்து கொடுத்தார்கள். பீஷ்மர் அவைகளை வேண்டாமென்று விலக்கி "நான் மநுஷ்யர்களுடைய நிலைமையை விட்டுச் சரசயனத்தில் படுத்துக் கொண்டிருக்கிறேன். மநுஷ்யர்களால் உபயோகிக்கப் படும் பதார்த்தங்களை நான் உபயோகிக்கமாட்டேன்"னென்று, "அர்ஜுனன் எங்கே?"யென்று கேட்டார். உடனே அர்ஜுனன் ஸமீபத்தில் வந்து நமஸ்கரித்து "ஸ்வாமி! என்ன கட்டளையிடுகிறீர்க"ளென்றான். பீஷ்மர் "என் தேஹம் மிகுந்த தாபத்தை அடைகிறது. உன் பாணங்களால் பிளக்கப்பட்டிருக்கிறது. மர்மஸ்தானங்கள் தாங்கமுடியாத உபத்ரவத்தை அடைகின்றன. வாய் உலர்கிறது. எனக்குச் சுத்தஜலத்தைக் கொடு"வென்றார். அர்ஜுனன் உடனே ரதத்திலேறிக் காண்டீவத்தை வளைத்துப் பீஷ்மரை ப்ரதக்ஷிணஞ்செய்து ஓர் திவ்யமான பாணத்தைத் தொடுத்து பர்ஜன்யதேவதையின் மந்த்ரங்களை ப்ரயோகித்துப் பீஷ்மர் படுத்திருக்கும் இடத்திற்குச் சற்று வலது புறத்தில் பூமியைப் பிளந்தான். உடனே அங்கிருந்து சுத்தமாயும் புண்யமாயுமிருக்கும் ஜலம் கிளம்பி திவ்யமான வாஸனையுடன் அமிருதத்தைப்போல் மதுரமாய் பீஷ்மருடைய தாபத்தைத் தணித்தது. அவர் அர்ஜுனனைப் பலவிதமாய்ப் புகழ்ந்து, யுத்தத்தை நிறுத்தி ஸமா

தானஞ்செய்துகொள்ளும்படி கௌரவர்களைப் போதித்தார். பிறகு அங்கு வந்தவர்கள் அவரிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு தங்களிருப்பிடம் சென்றார்கள்.

---

### கர்ணன் பீஷ்மனைக் கண்டது.

பிறகு ஸூர்யபுத்ரனான கர்ணன் அவரிடத்தில் தனியாய் வந்து நமஸ்கரித்துக் கண்களில் நீர் பெருக "ஸ்வாமி! நான் கர்ணன்; நமஸ்கரிக்கிறே" னென்றார். பீஷ்மர் கண்களைத் திறந்து அவனைப் பார்த்து ஒரு கையால் அவனை ஆலிங்கனஞ்செய்து "குழந்தாய்! நீ எப்பொழுதும் எனக்கு எதிரியாய் என்னை எவ்விதத்திலும் மிஞ்சவேண்டுமென்று யத்னஞ் செய்பவன். இப்பொழுது நீ என்னிடத்தில் வராமலிருந்தால் உனக்கு க்ஷேமம் கிடைக்காது. நீ ராதையுடைய புத்ரனல்ல, குந்தியின் புத்ரன். வ்யாஸரும் நாரதரும் இதை எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். உன்னிடத்தில் எனக்குக் கொஞ்சமேனும் த்வேஷமில்லை. நீ பிறந்த வழி தர்மவிரோதமானதால் உனக்குப் பாண்டவர்களிடத்தில் த்வேஷமும் கர்வமும் துஷ்டர்களுடைய ஸஹவாஸமும் ஸாதுக்களிடத்தில் விரோதமும் ஏற்பட்டன. இந்தக் கெட்ட குணங்களை நீக்குவதற்கே உன்னை நான் பலமுறை கண்டித்திருக்கிறேன். உன் பராக்ரமத்தைப் பற்றிக் குறைவாய்ப் பேசியிருக்கிறேன். அஸ்த்ரசஸ்த்ர வித்யைகளில் நீ க்ருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸமமானவன். உன்னிடத்தில் இதுவரையிலிருந்த கோபத்தை இன்று விட்டேன். நீ பாண்டவர்களுடன் ஸமாதானஞ்செய்வதே நல" மென்றார். அதற்குக் கர்ணன் "ஸ்வாமி! இதெல்லாம் எனக்கு முன்னமே தெரியும். ஆனாலும் நான் கௌரவர்களால் பலவிதமாய் உபகாரத்தையும் பெருமையையும் கீர்த்தியையும்

அடைந்திருக்கிறபடியால் அவர்களுக்காக யுத்தஞ்செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். பாண்டவர்கள் ஒருவராலும் ஜயிக்கப்படமாட்டார்களென்பதை அறிவேன். ஆனாலும் அவர்களிடத்தில் எனக்குள்ள த்வேஷத்தை நீக்க முடியாது. அவர்களை ஜயிப்பதற்கே ஸகல ப்ரயத்னமும் செய்வேன். நான் இதுவரையில் பலதடவைகளில் தங்களை அலக்ஷ்ய மாயும் அவமர்யாதையாயும் கோபமாயும் பேசின வார்த்தைகளை மன்னித்து எனக்கு யுத்தஞ்செய்ய அநுமதிகொடுக்கவேண்டு''மென்று ப்ரார்த்தித்தான். பீஷ்மர் ''அப்படியே செய். விதியை யார் வெல்லமுடியும்? கர்வத்தையும் த்வேஷத்தையும் விட்டு உன் பராக்ரமத்தையே ஆதாரமாய்க் கொண்டு யுத்தஞ்செய்; அர்ஜுனனுடைய பாணங்களால் உத்தமமான லோகங்களை அடைவா'' யென்றார்.

---

## பீஷ்மர் தர்மங்களை உபதேசித்தது.

பாரதயுத்தம் முடிந்து கௌரவர்கள் அழிந்து பாண்டவர்கள் ஜயமடைந்தபிறகு, யுதிஷ்டிரர் தன் பந்துக்களையும் மித்ரர்களையும் கொன்ற பாபத்தால் மனம்நொந்து ஸந்யாஸியாக நிச்சயித்த பொழுது, வ்யாஸர் முதலிய மஹர்ஷிகள் அவரிடத்தில் வந்து பல நீதிகளைச் சொல்லி அவருக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்தார்கள். பிறகு தர்மபுத்ரர சோகம் தீராமல் ஸ்ரீ கிருஷ்ணனையும் வ்யாஸரையும் மஹர்ஷிகளையும் தர்மங்களைத் தனக்குபதேசிக்கும்படி கேட்டார். ஒருநாள் காலையில் ஸ்ரீ கிருஷ்ணன் முதலியவர்கள் தர்மபுத்ரரிடத்திற்கு வந்தார்கள். அவர் ஸ்ரீ கிருஷ்ணனை க்ஷேமம் விசாரித்து ஆஸனத்தில் இருக்கச்செய்து பூஜித்தார். ஸ்ரீ கிருஷ்ணன் யாதொன்றும் சொல்லாமல் த்யானத்தில் ஆழ்ந்திருந்தார். யுதிஷ்டிரர் அதற்குக் காரணத்தைக்

கேட்க, ஸ்ரீ கிருஷ்ணன் "புருஷச்ரேஷ்டரான பீஷ்மர் என்னை த்யானம் பண்ணிக்கொண்டிருக்கிறார். ஆகையால் அவரிடத்திலேயே என் மனம் நாடியிருக்கிறது. நீயும் மற்ற அரசர்களும் அவரிடத்திருச் சென்று ப்ரார்த்தித்து தர்மார்த்த காம மோக்ஷங்களையும் வைதிக தர்மத்தையும் லௌகிக தர்மத்தையும் வர்ணாச்ரம தர்மங்களையும் ராஜ நீதியையும் இன்னும் மற்று உனக்குள்ள ஸந்தேஹங்களையும் அவரிடத்திலிருந்து கேட்கக் கடவாய். அவர் இவ்வுலகை விட்டுச் சென்றால் இவ்விதமான உபதேசத்தைச் செய்பவர் யாருமில்லை" யென்றார். பிறகு பாண்டவர்களும் மற்ற அரசர்களும் ஸ்ரீ கிருஷ்ணனும் பீஷ்மரிடத்திற்குச் சென்று அவரைப் பூஜித்து அவருடைய அனுமதியால் அவரைச் சூழ்ந்திருந்தார்கள். அப்பொழுது பீஷ்மர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய நிஜ ஸ்வரூபத்தையும் அனந்த கல்யாண குணங்களையும் விஸ்தாரமாய் வர்ணித்து ஸ்தோத்ரம் செய்தார். அதற்கு "பீஷ்மஸ்தவராஜ" மென்று பெயர் ("பாரதம், சாந்தி பர்வம், 46).

மறுநாள் அவர்கள்பீஷ்மரிடத்தில் வந்தபொழுது தர்மபுத்ரருக்குத் தர்மோபதேசம் செய்யும்படி ஸ்ரீ கிருஷ்ணன் பீஷ்மரை வேண்டி அதற்கு அவச்யமான சக்தியையும் தேஹ பலத்தையும் கொடுத்தார். அப்பொழுது பீஷ்மர் ஸ்ரீ கிருஷ்ணனை நமஸ்கரித்து அவருடைய அனுக்ரஹத்தை முன்னிட்டு, ஸகல தர்மங்களையும் உபதேசம் செய்து வந்தார். முடிவில் "குழந்தாய்! உனக்கு வ்யாஸர் கண்ணைகவும் ஸ்ரீ கிருஷ்ணன் ஆதாரமாகவும் இருக்கவேண்டு" மென்று உபதேசித்து "உத்தராயணம் வந்தபின் நான் குறித்த காலத்தில் நீங்கள் இங்கே வரலா'மென்று எல்லோருக்கும் விடை கொடுத்தனுப்பினர்.

## தேஹத்தை விட்டது

பிறகு உத்தராயணம் வந்து ஸூர்யன் திரும்பினதைக் கண்டவுடன் தர்மபுத்ரர் புரோஹிதர்களாலும் பந்துக்களாலும் அரசர்களாலும் மஹர்ஷிகளாலும் ப்ரஜைகளாலும் சூழப்பட்டுப், பீஷ்மருடைய உத்தரக்ரியைகளுக்கு வேண்டின ஸகல பதார்த்தங்களையும் எடுத்துக்கொண்டு பீஷ்மர் இருக்குமிடத்திற்கு வந்து நமஸ்கரித்து "ஸ்வாமி! நான் யுதிஷ்டிரன்; தங்களுடைய ஆக்ஞைப்படி வந்திருக்கிறேன். திருதராஷ்டிர மஹாராஜாவும் ஸ்ரீ வாஸுதேவரும் யுத்தத்தில் மிகுந்த அரசர்களும் நமது பந்துக்களும் ராஜ ஸ்த்ரீகளும் வந்திருக்கிறார்கள். கண்களைத் திறந்து எங்களைப் பாரும். நான் செய்யவேண்டியதைக் கட்டளையிடு"மென்றார். அப்பொழுது பீஷ்மர் கண்களைத் திறந்து எல்லோரையும் பாரத்துக் "குந்திபுத்ர! நீங்கள் வந்ததால் மிகவும் ஸந்தோஷித்தேன். ஸூர்ய பகவான் திரும்பிவிட்டார். நான் இந்தச் சரசயனத்தில் படுத்து ஐம்பத்தெட்டுத் தினங்களாகின்றன. புண்யமான மாகமாஸத்தில் இன்று சுக்லபக்ஷ அஷ்டமியாயிருக்கவேண்டு"மென்று, திருதராஷ்டிரனுக்கும் தர்மபுத்ரருக்கும் நீதியை உபதேசித்து ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து "என்னைக் காப்பாற்றும். உம்மையே நம்பியிருக்கிறேன். உம்முடைய நிஜஸ்வரூபத்தை அறிவேன். எனக்கு விடை கொடும். உம்மால் அனுப்பப்பட்டு நான் உத்தம கதியை அடையக்கடவேன். இந்தத் தேஹத்தை விடும்படி எனக்கு அனுமதி கொடுக்க வேண்டு"மென்று ப்ரார்த்தித்தார். வாஸுதேவர் "பீஷ்மரே! நீர் பாபலேசமுமற்றவர்; புண்யாத்மா. வஸுக்களுடைய லோகத்தில் வஸுக்களை அடைந்து விளங்கக்கடவீர். மார்க்கண்டேயரைப்போல் மிருத்யுவை உமது

ஸேவகனுக்கிக்கொண்டீர். உமக்கு அனுமதிகொடுக்கி றேன். தேஹத்தை விடலா''மென்றார். பிறகு பீஷ்மர் அங்கி ருந்த எல்லோரையும் பார்த்து ''நான் ப்ராணன்களை விடப் போகிறேன். அதற்கு நீங்கள் அனுமதி கொடுக்கவேண்டும். நீங்கள் ஸத்யத்தையும் தர்மத்தையும் ஒருபோதும் விடக் கூடா'' தென்று மௌனத்தையடைந்தார். மனதை த்யான த்தில் க்ரமப்படி நிறுத்தினார். ப்ராணவாயுக்களை அடக்கி மேல்நோக்கச்செய்தார். எந்தெந்த அவயவத்திலிருந்து ப்ராணன்களை இழுத்தாரோ அந்தந்த அவயவங்களிலிருந்து அம்புகள் பூமியில் விழுந்தன. ஒரு நொடியில் அவருடைய தேஹத்தில் பாணங்களே காணப்படவில்லை. ப்ராணன் அவ ருடைய தலையைப் பிளந்துகொண்டு ப்ரஹ்மரந்த்ரத்தின் வழியாய் ஆகாசத்தை நோக்கிச் சென்றது. தேவதுந்துபிகள் முழங்கின. பூமாரி பெய்தது. ஸித்தர்களும். ப்ரஹ்ம ரிஷி களும் நல்லது. நல்லதென்றார்கள். பெரிய அக்னிஜ்வாலை யைப்போன்ற ஓர் தேஜஸ் அவருடைய தலையிலிருந்து கிள ம்பி ஆகாசத்தில் சென்று ஒரு நொடியில் மறைந்தது. இப் படிப் பீஷ்மர் வஸுலோகத்திற்குச் சென்றார்.

பிறகு யுதிஷ்டிரரும் திருதராஷ்ட்ரனும் மற்றுமுள் ளோர்களும் துக்கந்தாங்காமல் அழுதுகொண்டு,பீஷ்மரைச் சிதையில் வைத்துப் பட்டுகளாலும் பூமாலைகளாலும் மூடி னார்கள். யுயுத்ஸு அவருக்கு வெண்குடைபிடித்தான்.பீமார் ஜுனர்கள் வெண்சாமரங்களை வீசினார்கள். நகுல ஸஹதே வர்கள் கிரீடம் வைத்தார்கள். திருதராஷ்ட்ரனும் யுதிஷ்டிர னும் காலடியில் நின்றார்கள். வயதுமுதிர்ந்த கௌரவ ஸ்த்ரீ கள் பீஷ்மருக்கு நான்கு பக்கங்களிலும் நின்று உத்தமமான விசிறிகளால் விசிறினார்கள். பிறகு அந்த மஹாத்மாவிற்கு பித்ருமேதமென்ற ஸம்ஸ்காரத்தை விதிப்படி செய்தார்கள்.

ரித்விக்குகள் அக்னியில் அநேக ஹோமங்களைச் செய்தார்கள். ஸாமகர்கள் ஸாமகானம் செய்தார்கள். பிறகு சந்தனக் கட்டைகளாலும் கறுத்த அகில்கட்டைகளாலும் மரமஞ்சளாலும் பல வாஸனை த்ரவ்யங்களாலும் அந்தத் தேஹத்தை மறைத்து அக்னியை வைத்தார்கள். திருதராஷ்ட்ரன் முதலிய பந்துக்கள் அந்தச் சிதையை அபஸவ்யமாய்ச் சுற்றிவந்தார்கள். பிறகு கௌரவ ச்ரேஷ்டர்கள் கௌரவ குலதிலகரான பீஷ்மருக்கு 'விதிப்படி தஹனக்ரியைகளை நடத்தி, வ்யாஸர் நாரதர் அஸிதர் ஸ்ரீ கிருஷ்ணன் மற்றுமுள்ள மஹர்ஷிகள் அரசர்கள் ப்ரஜைகள் ராஜஸ்த்ரீகள் பட்டணத்து ஜனங்கள் முதலியவர்களால் பின் தொடரப்பட்டு, ஸகல பாபங்களையும் போக்கிப் பரிசுத்தத்தையும் திவ்ய ஞானத்தையும் கொடுக்கும் கங்கைக் கரைக்குச் சென்றார்கள். விஷ்ணுபாதத்திலிருந்து உத்பத்தியாய் ஸகல லோகங்களையும் பரிசுத்தஞ்செய்யும் அந்தப் புண்யநதியில் க்ஷத்ரிய ச்ரேஷ்டர்களும் மற்ற ஜனங்களும் பீஷ்மருக்கு விதிப்படி மந்த்ரங்களை உச்சரித்து ஜலதர்ப்பணங்களைச் செய்தார்கள்.

---

### கங்கை பிரலாபித்தது

அப்பொழுது பீஷ்மரைப் பெற்று வளர்த்த தாயான கங்காதேவி தன் புத்ரன் மரணமடைந்ததை நினைத்து நினைத்துத் துக்கந்தாங்காமல் அந்த ஜலத்திலிருந்து எழுந்து வாய்விட்டழுது கொண்டு கௌரவர்களைப் பார்த்து ''அரசர்களே! என் குழந்தையான பீஷ்மன் ஸர்வவிதத்திலும் நிகரற்றவன். அழகிலும் ரூபலாவண்யத்திலும் மன்மதனைப் பழித்தவன். பராக்ரமத்தில் பரசுராமரை மிஞ்சினவன். ஸத்யத்திலும் தர்மத்திலும் ஸத்யதேவதையையும் தர்ம தேவ

தையையும் போன்றவன். ஆசாரத்தில் லோகபிதாமஹ ரான ப்ரஹ்மாவைப் போன்றவன். அறிவிலும் யுக்தியிலும் ஆலோசனையிலும் பிருஹஸ்பதிக்கு நிகரானவன். பித்ரு பக்தியில் மார்க்கண்டேயரையும் ராமசந்த்ரனையும் போன்ற வன். பெரியோர்களைப் பூஜிப்பவன். எடுத்த வ்ரதத்தை விடாதவன். அண்டினவர்களைக் காப்பாற்றுகிறவன். இவ் விதமான உத்தம புருஷன் ஊர் பேரில்லாத சிகண்டியால் கொல்லப்பட்டான். இவ்விதமான புத்ரனைப் பறிகொடுத் தும் என் ஹ்ருதயம் வெடிக்கவில்லையே! என் மகன் எவ்வாறு செய்யப்பட்டிருக்கிறதோ? பரசுராமனை வென் றவன் சிகண்டியின் பாணங்களால் அடிபட்டு விழலாமோ? இதென்ன அந்யாய''மென்று துக்கித்தாள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் அவளை மதுரமான வார்த்தைகளால் தேற் றிப் ''புண்யநதியே! நீயும் மற்றவர்களைப்போல் வருந்த லாமோ? பீஷ்மனைப் பற்றின தேவரஹஸ்யம் உனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கையில் நீ ஸாமான்ய ஸ்த்ரீகளைப் போல் துயரப்படலாமோ? உன் புத்ரன் வஸுக்களில் ஒருவர். சாபத்தால் மனுஷ்ய ஜன்மத்தை அடைந்தார். க்ஷத்ரிய தர்மமும் ஸத்யமும் இவ்விதமென்று லோகத்திற் குத் தான் நடத்திக் காட்டினார். அவரை எதிர்க்கக் கூடிய வர்கள் எந்த லோகத்திலுமில்லை. அவருடைய மரணத்திற் குச் சிகண்டி காரணமல்ல. அர்ஜுனனும் காரணமல்ல. ம்ருத்யு தேவதையும் காரணமல்ல. அவருடைய இச்சையே காரணம். காலனைத் தன் அடிமையாய்ச் செய்து கொண்ட வருக்கு யார் எந்தக் கெடுதியைச் செய்ய முடியும்? க்ஷத் ரிய தர்மப்படி யுத்தகளத்தில் நிகரில்லாமல் யுத்தஞ்செய்து, கோடானுகோடி வீரர்களைக் கொன்று, ஒருவராலும ஜயிக் கப்படாமல், தான் பாண்டவர்களுக்குச் செய்த ப்ரதிக்

ஞையை நிறைவேற்றுவதற்காக ஆயுதங்களை வைத்து விட்டு, சத்ருக்களின் பாணங்களால் தேஹம் பிளக்கப்பட்டுத், தன்னிஷ்டத்தால் ரதத்திலிருந்து சரசயனத்தில் படுத்தார். ஐம்பத்தெட்டு தினங்கள் வரையில் தன்னுயிரை நிறுத்தி வைத்துக்கொண்டு எல்லோர்க்கும் தர்மோபதேசஞ்செய்து, முடிவில் என்னிடத்தில் மனஸை நிறுத்தி என்னையே த்யானித்து ஸகல கர்மங்களையும் எனக்கு ஸமர்ப்பணஞ்செய்து, என் அனுமதியைப் பெற்று யோகமார்க்கத்தால் தன் தேஹத்தை விட்டு, வஸுலோகத்திற்குச் சென்று வஸுக்களைச் சேர்ந்தார். அந்த மஹாத்மாவிடத்திலேயே என் மனஸு நாடியிருக்கிறது. ஆகையால் தைர்யத்தை யடைந்து துக்கத்தை விட்டு இப்படிப்பட்ட மஹானுபாவரைப் புத்ரனாயடைந்த பாக்யத்தை நினைத்து ஸந்தோஷமடை"யென்றார். வ்யாஸபகவானும் அவளைப் பல விதமாய் ஸமாதானஞ்செய்தார். இப்படி ஆறுதல் சொல்லப்பட்ட கங்கை துக்கம் நீங்கி, அங்கு வந்தவர்கள் யாவர்க்கும் அனுமதிகொடுத்து அவர்களால் பூஜிக்கப்பட்டுத் தன் ஜலத்திற்குள் மறைந்தாள்.



## தமிழ்ப் புஸ்தகங்கள்.

1. இராமசரிதமானஸம் என்னும் துளஸீரா மாயணம் பாலகாண்டம் முதல் வால்யூம். 3—4—0

இது ஹிண்டி பாஷையிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது. அற்புதமான கதை.
[அயோத்தியா காண்டம், ஆரண்ணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம் சேர்ந்து இரண்டாவது வால்யூம அச்சாய்க் கொண்டிருக்கிறது. சுந்தர யுத்த உத்தர லவகுச காண்டங்கள் மூன்றுவது வால்யூமாகும.]

2. ரத்தினபபிரபை இது ஓர் அற்புத நாவல் (கதாஸரித்ஸாகரத்தி லிருந்து மொழிபெயர்க்கப்பட்டது.) ... 0–14—0

3. ச்யவனோபாக்யானம இதில் பிருகுமகர்ஷியின்கதை சர்யாதிசரித்ரம் ஸுகன்யை சரித்ரம் ருருசரித்ம் முதலிய கதைகளிருக்கின்றன. இது அனேக புராணங்களிலிருந்து எழுதப்பட்டது. ... 0—8—0

4. பாரிஜாதாபஹரணம் ஸ்ரீ பாகவதம் விஷ்ணுபுராணம் முதலியவைகளிலிருந்துஎடுத்து எழுதப்பட்டது. இதில் சமந்தகோபாக்கியானம், ஜாம்பவதிவிவாஹம், ஸத்தியபாமாவிவாஹம், நரகாசுரஸம்ஹாரம், பாரிஜாதாபஹரணம், அமிருதமதனம் முதலியவை இருக்கின்றன. ... 0—4—0

| | | |
|---|---|---|
| 5. | பீஷ்மசரித்ரம. மஹாபாரதம் முதலிய புராணங்களிலிருந்து மொழி பெயர்க்கப் பட்டது . | 0—5—0 |
| 6. | விதுரநீதி. மஹாபாரதத்திலிருந்து எழுதப் பட்டது. இதில் ஆணிமாண்டவியர் சதை, விதுரர் உறபதநி, ஸஞ்ஜயயானம், விதுர நீதி முதலியவை இருக்கின்றன ... | 0—8—0 |
| 7. | சித்திரகேது. ஸ்ரீபாகவதத்திலிருந்து எழு கப்பட்ட நீதியும் வைராக்கியமும் விளங் குகின்ற கதை .. | 0—2—0 |
| 8. | ஸீமந்தினி சரித்ரம. ஸ்காந்தபுராணத்தி லுள்ளது. யாஞ்ஞவல்கிய சரிதநிரமுள் பட | 0—2—0 |

மற்றும் அநேக அபூர்வமானகதைகள் தயாராய்க் கொண்டிருக்கின்றன. மேல்கண்ட கதைபுஸ்தகங்கள தெலுங்கிலும அச்சிடப்படுகின்றன.

தபால் வி. பி. முதலிய செலவு பிரத்தியேகம்.

விலாஸம்:—

பண்டிட் டி. ஆர். கிருஷ்ணசாரியார்,
ப்ரொப்ரைடர்,

மத்வ விலாஸ புஸ்தகசாலை,
31, தேரடித் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை.

April 1917.

Commercial Press, Madras, S,E,